# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிருர்கள் டாக்டர்கள்



டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



சினம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் டிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் பாதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி ணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே: மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான ளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு பாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் தீராண ரம்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**

தாய்ப் பால் விடுக்கும் தலைபாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**

இரத்தச் செழிப்புக்கும் தெம்புக்கும் கல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க... கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...

**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**

(புத்தகம், எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

F. 53-140 TM

# கலை எழில் துலங்கும் கண்கவர் ஆடைகளை வழங்குவது கோ-ஆப்டெக்ஸ்

ஒவ்வொரு விழாக்காலத்திலும் கோ-ஆப்டெக்ஸ் எழில்
வண்ணத் துணிகளை அளித்துவருகிறது. இனித்திடும்
இப்பொங்கல் விழாவுக்கும் அப்படியே வண்ணமயமான
ஏராளத் துணி வகைகள் புதிதாக வந்துள்ளன!
உங்களை மகிழ்விக்கக் காத்திருக்கிறது கோ-ஆப்டெக்ஸ்.

சேலைகள்—யமுனா. **அஜந்தா. சாமுண்டி** பிரிண்டட் சேலைகள்
காஞ்சிபுரம், ஆரணி, கும்பகோணம்
அசல் பட்டுச் சேலைகள். உறையூர், கோயம்புத்தூர், சேலம்,
திருச்சி, பரமக்குடி, மதுரை கைத்தறி நூல் சேலைகள்.
சுங்கடி பிரிண்டுகள் மற்றும் சின்னாளப்பட்டி சேலைகள்.

வேட்டிகள் — துவாலைகள் — டர்கிஷ் மற்றும் சாதா வகைகள்.
மென்மையான மற்றும் ஈரத்தை உறிஞ்சும் ரகங்கள்

படுக்கை விரிப்புகள் —
நவீன வடிவங்களில் நேர்த்தியான செவவு, மற்றும் தலையணை உறைகள்

லுங்கிகள்— கோடிட்ட மற்றும் கட்டமிட்ட பல வகைகள்.

அலங்காரத் துணிகள் மற்றும்
உடுப்புகளுக்கான துணிகள்

சம்பளம் பெறுவோருக்கு
வழக்கம்போல் கடன் வசதி உண்டு

20-1-1977 வரை







20-1-77 வரை ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களில் விற்பனை உண்டு

**பம்பாய் & டெல்லியில் கோ-ஆப்டெக்ஸ் நிலையங்கள்:**

**கோ-ஆப்டெக்ஸ் அஜந்தா ஹவுஸ், 164, டாக்டர் D. N. ரோடு, பம்பாய்-1**
மற்றும் பம்பாயிலுள்ள மற்ற கோ-ஆபடெகஸ் நிலையங்கள்.

**யமுனா கோ-ஆப்டெக்ஸ் கைத்தறி சூப்பர் மார்க்கெட், ஏ.டி**
**கட்டிடம், 41-42, நைவாலா, பிளாக் L, பாங்க தெரு, கரோல் பாக், புது டெல்லி-5**
**மற்றும் புது டில்லியில் உள்ள மற்ற கோ-ஆப்டெக்ஸ் நிலையங்கள்.**

# தென்னம்பாளை பிளந்து சிந்திடும் சிரிப்பழகி!!

# KTR

- கோபுர மார்க் பன்னீர்
- சந்தனாதித் தைலம்
- பொன்னாங்கண்ணித் தைலம்
- லவ் பேர்ட்ஸ் பத்தி ...




## K.T.R வாசனாதி திரவியசாலை
திருவாரூர்-610 108 (தமிழ்நாடு)






# கல்கி

1977 ஜனவரி 9

அலை

மார்கழி 25

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.







புதிர்: படம் (அ)ல் உள்ளதைப் போல் எட்டு முக்கோணங்களும் படம் (ஆ)ல் உள்ளதைப் போல் நான்கு முக்கோணங்களும் படம் (இ)ல் உள்ளதைப் போல் நான்கு முக்கோணங்களும், கத்தரித்து எடுத்துக் கொண்டு ஒரு சதுரம் அமைக்க வேண்டும். முடியுமா?

— முத்துகுமார்

விடை (60)ம் பக்கம் பார்க்க





# க்ளியர்டோன் என்றாலே பிரஷ்ஷர் குக்கர்கள்

Kleertone

அதோடு, மில்க் கூலர், காஸ் லைட்டர், கதவு நாத மணி, இஸ்திரிப் பெட்டி.

தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட்.

Creative Unit-2551

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது.

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. கம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப் பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட் ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.



# புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



டாடா ஸ்டீல்

TIS-1247 A

# காட்டுப் புலிகளும் காகிதப் புலிகளும்!

**கல்கி** மலர் 36 இதழ் 24



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ஜனசங்கத்தையும் சுதந்திரக் கட்சியையும் ஒன்ருக இணைத்துப் பார்த்துக் ''காகிதப் புலிகள்'' என்று வர்ணித்துள்ளார் பிரதமர்.

ஜன சங்கத்துக்கும் சுதந்திரக் கட்சிக்கும் பொருளாதாரக் கொள்கை அளவில் ஓரளவு ஒற்றுமை இருப்பினும், மற்ற அம்சங்களில் பெருமளவில் வேற்றுமை உண்டு.

அதுபோக, சுதந்திரக் கட்சியின் கொள்கைகளைப் பற்றி விமர்சனம் செய்யாமல் அதில் சேர்ந்துள்ள சில மாஜி மன்னர்களையும் பண மூட்டைகளையும் சுயநலமிகளையுமே தாக்கியிருக்கிருர் பிரதமர்.

மாஜி மன்னர்களும் பண மூட்டைகளும் சுயநலமிகளும் சுதந்திரக்கட்சிக்கு மட்டுமே ஏக போக்கியமானவர்கள் அல்ல. காங்கிரஸ் உட்பட எல்லாக் கட்சிகளிலுமே இருக்கிருர்கள்; அல்லது பின்னணியிலிருந்து ஆதரவு தருகிருர்கள்.

பிரதமர் பேச்சின் தொடர்பாக மாஜி மன்னர்கள் எல்லாருமே மோசமானவர்கள் என்ருே, செல்வந்தர்கள் எல்லாருமே சுயநலமிகள் என்ருே நாம் முடிவு கட்டிவிட வேண்டுவதுமில்லை.

இது ஒருபுறமிருக்க, ஓரிரு மாஜி மன்னர்களும், ஒருசில பணமூட்டைகளும் சுதந்திரக் கட்சியில் வந்து சேர்ந்தது எப்படி என்றும் நாம் கவனிக்க வேண்டும்.

சுதந்திரக் கட்சியை ராஜாஜி ஆரம்பித்தபோது அவர் எந்த மகாராஜாவையோ அல்லது பண மூட்டையையோ அணுகித் தமக்கு ஆதரவு தருமாறு கோரவில்லை. மாருகச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட தேச பக்தர்கள், ஒழுக்கசீலர்கள் என்று பெயர் பெற்றிருந்த மக்கள் தலைவர்கள் சிலரைத்தான் அணுகினுர். ஆனுல் அவர்கள், ஒழுக்கசீலர்களாகவும் தேச பக்தர்களாகவும் இருந்த போதிலும் சுதந்திரக் கட்சியில் சேர்ந்தால் தங்களுக்குள்ள தனிப்பட்ட பிரபையை இழந்து விடுவோமோ என்று யோசிக்கும் அளவுக்குத் தன்னலமுடையவர்களாக விளங்கினுர்கள். எனவே ராஜாஜி கோரிய ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை. பிறகு ராஜாஜி கட்சியை வளர்க்க வேண்டிய அவசியத்துக்காகக் கிடைத்த உதவியை அதை அளிக்க முன்வந்தவர்களிடம் பெற்றுக் கொண்டார்.

பிரதமர் குறிப்பிட்டுச் சொல்லிக் கிண்டல் பண்ணும் அளவுக்கு இன்று சுதந்திரக்கட்சி இயங்குகிறதா என்பதே ஐயப்பாட்டுக்கு உரியதுதான். சுதந்திரக் கட்சியைக் கலைத்து பிலு மோடி பாரதிய லோக தளத்துடன் சேர்த்து விட்ட பிறகு தமிழகத்தில் அதனை திரு ஜி. கே. சுந்தரம் ஓரளவு கட்டிக் காத்து வருகிருர். வடக்கே ஏதோ பெயரளவுக்குச் செயல்பட்டு வருவதாகச் சொல்லலாம்.

இப்படி சுதந்திரக் கட்சிதான் பலவீனமடைந்து விட்டதே தவிர அதன் கொள்கைகள் முன் எப்போதையும் விட பலம் வாய்ந்தவையாக, முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன.

சிறப்பாக அதன் பொருளாதாரக் கொள்கைகள் மிகவும் சக்தி பெற்றவையாக விளங்குவதைக் கண்ணுக்கு மெய்யாகக் காண்கிருேம். அந்தக் கொள்கைகள் பலவற்றை இன்றைய அரசு சுவீகரித்துக் கொண்டிருப்பதே இதற்கு அத்தாட்சி.

மேதை ராஜாஜி வகுத்துத் தந்த சுதந்திரப் பொருளாதாரக் கொள்கைகளை முழுமையாகப் பின்பற்ற, சோஷலிஸ சித்தாந்தத்தை வார்த்தையளவிலேனும் ஏற்றுக் கொண்டு விட்ட காங்கிரஸால் முடியாது. ஆனுல் அந்தக் கொள்கைகளை விட்டால் தேசம் துரிதமாக முன்னேற வேறு வழி கிடையாது என்பதை அரசு உணர்ந்து, முழுமையாக இல்லாவிட்டாலும், பெருமளவு பின்பற்றி வருகிறது.

நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு பாரதப் பொருளாதாரம் வெகுவாக முன்னேறியிருப்பதைப் பார்த்து இன்று உலகமே அதிசயிக்கிறது. இது எப்படிச் சாத்தியமாயிற்று? வேலை நிறுத்தங்கள் நீங்கின், உழைப்பார்வம் பெருகியது, பொறுப்புணர்ச்சி அதி

கரித்துள்ளது என்றால் இவை பாதிக் கதை தான். மிச்சமுள்ள கதை என்ன?

''பர்மிட் - லைசென்ஸ் - கண்ட்ரோல் ஆட்சி'' என்று வர்ணித்தார் ராஜாஜி. இன்று பர்மிட் லைசென்ஸ்கள், பலப்பல தொழில் வர்த்தகத் துறைகளில் ஒழிக்கப்பட்டுள்ளன. ஏராளமான இனங்களில் கண்ட்ரோல்கள் நீக்கப்பட்டுள்ளன. உற்பத்தி அதிகரிக்கவும் ஏற்றுமதி பெருகவும் இன்று இடையூறுகளை நீக்கிப் பலப்பல சலுகைகள் அறிவிக்கப்பட்டுள்ளன. இதற்கெல்லாம் வழி காட்டியவர் யார்? அல்லது எந்தக் கட்சி?

அமைச்சர் திரு சி. எஸ். 'வரி விதிப்பதன் நோக்கம், அரசுக்கு வருமானத்தைத் தேடுவது மட்டுமல்ல; உற்பத்தி அதிகரிக்கும் விதமாக வரி விதிப்பு அமைய வேண்டும்' என்று அடிக்கடி கூறி வருகிறார். அதற்கேற்பச் செயல்பட்டும் வருகிறார். வரிச் சலுகைகள் பல சென்ற பட்ஜெட்டிலும் அதற்குப் பின்னரும் வழங்கப்பட்டன. நற்பலனும் விளைந்தது. இது அவர் யாரிடம் கற்றுக் கொண்ட பாடம், அல்லது எந்தக் கட்சியின் சித்தாந்தம்?

காங்கிரஸ்காரர்களைப் பார்த்து திரு சி.எஸ். 'அரசாங்க உத்தியோகஸ்தர்களின் அலுவல்களில் தலையிடாதீர்கள்; அது கெட்ட பெயரைத்தான் தேடித் தரும். ஜாக்கிரதை!' என்று திரும்பத் திரும்ப எச்சரிக்கிறார். இது எந்தத் தலைவருடைய அறிவுரையின் எதிரொலி?

'பாரதம் என்றுமே விவசாய நாடாகத்தான் இருக்கும்; விவசாயத்துக்கே இனி அரசு முதலிடம் தரும்' என்று பிரதமர் கௌஹாத்தியில் பகர்ந்தார். இது ராஜாஜி சுதந்திரக் கட்சி தோன்றிய நாளாகக் கூறி வந்தது தான். சமீப காலமாக அரசு இதனை ஏற்று அமல்படுத்தியிருக்கிறது; அசாதாரண வெற்றியும் கண்டிருக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்குப் பசுமைப் புரட்சி துணை நிற்கிறது.

ஆக, இன்று சுதந்திரக் கட்சியைக் காகிதப் புலி என்று பிரதமர் கிண்டல் செய்தது பற்றி நாம் கவலைப்படவில்லை. அக்கட்சியின் கொள்கைகளை முழுமையாக இல்லாவிட்டாலும் பெருமளவாவது ஏற்று நாடு உயரப் பாடுபடுகிறாரே, என்ற அளவில் மகிழ்கிறோம்.

அதே நேரத்தில் கட்சியில் உள்ள மகாராஜாக்கள், பண மூட்டைகள் பற்றிய பிரதமரின் விமர்சனம் மற்றோர் உண்மையையும் நமக்கு உணர்த்துகிறது. ஒரு கட்சியில் சேரும் அங்கத்தினர்கள் சிறந்த குண நலன்களை உடையவர்களாக விளங்க வேண்டியது ரொம்ப அவசியம்தான். ஆனால் அங்கத்தினர்களின் குணச் சிறப்பை விடக் கட்சியின் கொள்கைச் சிறப்பு முக்கியமானது. அங்கத்தினர்களும் குட்டித் தலைவர்களும் இன்று இருக்கலாம்; நாளை வேறு கட்சிக்குத் தாவலாம். நற்பெயர் வாங்கலாம், அல்லது நாசமாய்ப் போகலாம். கட்சி பலம் பெறலாம், அல்லது பலவீனமடையலாம். ஆனால் கட்சியின் அடிப்படைக் கொள்கைகள் சத்தியமானவையாக இருந்தால் சக்தி வாய்ந்தவையாக விளங்கி, சாகா வரம் பெற்றுத் திகழும்.

எனவே சுதந்திரக் கட்சி காகிதப் புலி என்றால் புலி வடிவிலுள்ள அந்தக் காகிதத்தின் மேனியில் எழுதப்பட்டுள்ள 'வரி'கள் அக்கட்சியின் கொள்கைகள். காகிதமும் அதில் எழுதப்படும் வரிகளும் இன்றி எந்தக் காரியம்தான் இன்று உலகில் நடக்கும்? இந்தக் காகிதப் புலியினாலும் அதில் எழுதப்பட்டுள்ள வரிகளாலும் நாட்டுக்கு நன்மையே தவிர தீங்கு ஏதுமில்லை.

ஆனால் காட்டை விட்டு நாட்டுக்கு வந்து மக்களுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடிய அசல் புலிகளும் உண்டு. அவற்றையும் நன்றாகவே பிரதமர் இனம் கண்டு கொண்டிருக்கிறார்.

இல்லாமலா, சுதந்திரக் கட்சியைக் கிண்டல் செய்ததற்கு ஓரிரு தினங்களுக்கு முன் கம்யூனிஸ்ட் கட்சியின் உள் நோக்கங்களை அவர் அம்பலப்படுத்திக் கடுமையாக விமர்சித்தார்?

ராஜாஜி சிந்தனை

## சாமானியனும் சாந்த சமநிலையும்!

மார்க்க அரேலியருடைய ஆத்மசிந்தனை ஆயிரக் கணக்கான மக்களுக்குச் சாந்தமும் சக்தியும் தந்திருக்கிறது. பல பெரியோர்கள் இதைக் கொண்டு கடைத்தேறியிருக்கிறார்கள் என்று ஜான் ஸ்டுவர்ட் மில், ஜான்மார்லி என்கிற ஆங்கில ஞானிகள் எழுதியிருக்கிறார்கள். விருப்பு வெறுப்பு இரண்டையும் நீக்கிய உண்மைத் தவமும் ஒப்புரவறிந்து செய்தலாகிய இல்லறமுமே மார்க்க அரேலியருடைய ஆத்ம சிந்தனைகளிலிருந்து அடையக் கூடிய உபதேசம். இன்பமும் துன்பமும் ஒருவன் சுதந்திரம். அவை உள்ளத்தின் நிலையேயன்றிப் புறப் பொருளில் இல்லை என்பதைப் பலவாறு அவர் வற்புறுத்துகிறார். உலகம் முழுவதும் ஓர் உயிர் கொண்ட அமைப்பு. அதில் ஓர் அங்கமாவாய் நீ, அதன் நன்மையை நாடுவதே உன் இயற்கைத் தருமம். ஆகவே ஒப்புரவறிந்து செய்தலே உன் கடமை, அதுவே உனது நலம். நேர்வனவெல்லாம் தனி ஒருவனுக்குத் துன்பம் போல் தோன்றினும் உலகின் பொது நலனுக்காகவே நேரும்; ஆகையால் எது நேரினும் மனம் கலங்காமல் பொறுத்துக்கொள்ளக் கடவாய் என்று தம் மனத்தைத் தாமே அடிக்கடி பல்வேறு விதங்களில் உறுதிப்படுத்திக் கொள்கிறார். சாந்த சமநிலையே தெய்வ பக்தி; அதுவே ஆனந்தம் என்பது மார்க்கரது கொள்கை. இந்நிலையை அடையச் சாமானிய மனிதனும் தைரியமாக முயலுமாறு அவர் வழிகாட்டியிருக்கிறார். —ஆத்மசிந்தனை நூலுக்கு முன்னுரை






கார்ட்டர் பிரஷ்னேவைச் சந்திக்கத் திட்டமிட்டுள்ளார்.



# ஒன்பது தலைமுறைகளின் நன்றி!

"எழுத்தறிவிப்பவன் ஏஜெண்டு" என்ற தலைப்பில் டிசம்பர் 26ந் தேதி இதழில் வெளியான தலையங்கம் பல பள்ளி ஆசிரியர்களுக்கு ஆறுதல் அளித்திருக்கிறது. வேறு சிலர் இதை விடக் கடுமையாக எழுதியிருக்கவேண்டும் என்று அபிப்பிராயப் பட்டிருக்கிறார்கள். அப்படிக் கருதுபவர்களுடன் நாம் ஒத்துப் போக முடியவில்லை என்பதைத் தெரிவிக்கவே இரு கடிதங்களை வட்டமேஜைப் பகுதியில் பிரசுரித்து இங்கு துணைத் தலையங்கமும் எழுதுகிறோம்.

பள்ளி ஆசிரியர்களை வற்புறுத்துவது வேறு, கட்டாயப்படுத்துவதும், பழி வாங்குவதும் வேறு. குடும்பக் கட்டுப்பாடு இயக்கத்துக்கு உதவ முன்வாருங்கள் என்று பள்ளி ஆசிரியர்களை மட்டுமென்ன, எல்லாத் துறையினரையுமே அரசு கேட்டுக் கொள்ளலாம், வற்புறுத்தலாம். அப்படி உதவ முன்வருபவர்கள் தேசத்துக்குப் பெரிய சேவை செய்தவர்களாகிறார்கள். அறுவைச் சிகிச்சைக்கு ஒருவரைச் சம்மதிக்க வைப்பவன் ஒன்பது தலைமுறைக்குப் பாரத மக்களின் நன்றிக்குப் பாத்திரமாகிறான் என்றால் அது சிறிதும் மிகைப்படுத்திக் கூறுவதாகாது. ஆனால் பள்ளி ஆசிரியர்கள் கட்டாயப்படுத்தப்படும்போதும் பழி வாங்கப்படும்போதும் சமுதாயத்தில் தங்கள் மதிப்பை இழக்கிறார்கள். ஆசிரியர் சமூகம் மதிப்பிழந்தால் எந்தச் சமுதாயமும் முன்னேறவே முடியாது.

பள்ளி ஆசிரியர்களைக் கட்டாயப்படுத்தவோ பழி வாங்கவோ வேண்டாம் என்று அரசு உத்தரவு பிறப்பித்ததற்கு நன்றி தெரிவித்துக்கொள்ளும் அதே நேரத்தில் பள்ளி ஆசிரியர்கள் தாங்களாகவே முழு மூச்சுடன் ஓய்வு நேரத்தில் இத்துறையில் உதவ முன்வரவேண்டும்; மற்றவர்களுக்கு முன் உதாரணமாக விளங்கி வழிகாட்ட வேண்டும் என்று கூறவும் நாம் தயங்கவில்லை.

"அருவருப்பான காரியம்" என்று எழுதியிருக்கிறீர்களே என்று கிராம சேவக் திரு கோமதிநாயகம் விசனப்பட்டுக் கடிதம் எழுதியிருக்கிறார். ஆசிரியர்கள் மட்டுமின்றி ஆசிரியைகளும் ஆள் பிடித்து வரும் கட்டாயத்துக்கு உள்ளாகிப் பழி வாங்கப்படுவதுதான் அருவருப்பான செயலேயன்றிக் குடும்பக் கட்டுப்பாடு இயக்கமே அருவருப்பானது என்றோ அதற்கு ஆசிரியைகளும் உதவுவது அருவருப்பானது என்றோ நாம் சொல்லவில்லை.

குடும்பக் கட்டுப்பாடு இயக்கத்தின் அவசியத்தை உணர்த்தும் பல தலையங்கங்கள் மட்டுமின்றிக் கட்டுரைகளும் கல்கியில் பிரசுரமாகியுள்ளன; இனியும் வெளிவரும். பிறக்கும் குழந்தைகளுக்கு உச்ச வரம்பு விதித்துச் சட்டமே இயற்றலாம் என்ற திரு க. சந்தானத்தின் கருத்தைக்கூட முன்பு ஒரு தலையங்கத்தில் கல்கி ஆதரித்துள்ளது.

தேசபக்தி உள்ள யார்தான் குடும்பக் கட்டுப்பாடு இயக்கத்துக்கு ஆதரவு தராமல் இருக்க முடியும்?

---



"ஓம் ! ஒழுங்கா பாடறதுன்னு பாடுங்க ! வெங்கட்டராமான்னு பாடச் சொன்னால் வெங்கட்ராகவா, வெங்கட்ராகவான்னு பாடறேளே! கிரிக்கெட் கிரவுண்டுக்கு போகணும்னு இப்பவே போங்க."

"வீட்டு வேலைகளையும் செய்து கொண்டு, டி.வி.யில் படமும் பார்த்தேன்..."





"சுவாமி காலண்டர் வேணுமா? அல்லது நடிகை படம் போட்ட காலண்டர் வேணுமா?"

"நடிகை நடித்த சுவாமி காலண்டர் வேணும்."









# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் 'எரிபொருள்'




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலுக்கு எரிபொருள் தேவைப்படுவது போன்றே, உங்களுக்கும் நீங்கள் ஒவ்வொரு தினத்தையும் சுறுசுறுப்புடன் தொடங்கவும், நாள் முழுவதும், சிறக்க நல்ல வேகத்துடன் செயலாற்றவும், ஒரு சக்தியளிக்கும் 'எரிபொருள்' தேவை. இதற்கு, நீங்கள் தினமும் காலையில் பூஸ்ட் பருக வேண்டியது அவசியம். முக்கியமாக பள்ளி வேலையிலும், விளையாட்டிலும் அதிக சக்தியை செலவழிக்கும் உங்கள் குழந்தைகளுக்கு பூஸ்ட் அவசியம் அளியுங்கள்.

பூஸ்ட் ஒரு புதிய, மால்ட், சாக்லெட், பால் சேர்ந்துள்ள பானம்.

உடலுக்குத் தேவையான போஷாக்கினைப் பற்றி அனைத்தையும் அறிந்துள்ள 'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது.

பூஸ்ட், முழு ஆடைப்பால், கோதுமை, பார்லி மால்ட், கோகோ மற்றும் இயற்கையான வைட்டமின்கள், கனிஜச் சத்துக்கள் முதலியவற்றிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

மற்ற எந்த சாக்லெட் பானத்தையும்விட பூஸ்ட்டில் அதிக அளவு பால் சேர்க்கப்பட்டுள்ளது. பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பால், உங்கள் குழந்தைகளுக்கு அதிக போஷாக்கினையும், அதிக அளவு புரதச்சத்துக்களையும் அளித்து, அவர்கள் வளர்ச்சிக்கு உதவுகிறது.
பூஸ்ட்டில் உள்ள அதிக அளவு பாலினை, பூஸ்ட் பானத்தை அருந்தும் போது நீங்களே உணரலாம்.

பூஸ்ட்டின் மால்ட், சாக்லெட் கலந்த நிறைசுவையை உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்புவர்.
பூஸ்ட், உங்களுடைய ஒவ்வொரு தினத்தையும் துடிதுடிப்பான முறையில் தொடங்குவதற்கு ஒரு அருமையான பானம்.

## 'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது

8-4212 Tam. A

# "நன்றி! ராஜகோபால் நன்றி!"

எஸ்.ஆர்.சீனிவாசன்

'டக், டக்' என்று கதவு தட்டும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டார், ராஜகோபால். கதவு மூடப்பட்டிருந்தால் வெளியிலிருந்து வருபவர்கள் கதவைத் தட்டத்தானே செய்வார்கள்? அந்தச் சத்தம் 'டக், டக்' என்றுதானே கேட்கும்? இதற்கு அவர் ஏன் திடுக்கிட வேண்டும்? அவர் செய்திருந்த வேலை அவரை அவ்வாறு திடுக்கிட வைத்ததோ?

ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக் கொண்டார், குரலைச் சரிப்படுத்திக் கொண்டு ''உள்ளே வரலாம்'' என்றார்.

கதவு திறந்தது. உள்ளே நுழைந்தார்கள், இன்ஸ்பெக்டர் சிவமும் இரு கான்ஸ்டேபின்களும்.

''வாருங்கள்! வாருங்கள்! நானே உங்கள் நிலையத்திற்கு வரவேண்டும் என்றிருந்தேன்.''

சிவத்தின் புருவங்கள் சற்று உயர்ந்தன.

''நான் இங்கு வருவது உங்களுக்கு முன்பே தெரியும் போலும்.''

''ஒருவாறு ஊகித்தேன்.''

''மற்றவற்றையும் ஊகித்துச் சொல்லுங்களேன்.''

''நான்கு தினங்களுக்கு முன் திடீரென்று மறைந்து போனதாகக் கருதப்படும் என் 'பிஸினஸ் பார்ட்னர்' தணிகாசலம் பற்றி விசாரிப்பதற்காக வந்திருக்கிறீர்கள்.''

''உங்களிடமும் ஓர் இரகசிய இலாக்கா இருக்கிறது என்று எண்ணுகிறேன்.''

''இதில் ரகசியம் ஒன்றுமில்லை. இன்று காலையில் தணிகாசலம் அவர்களின் தம்பி முத்துவேல் என்னிடம் வந்து விசாரித்தார். 'திருச்சியில்தான் ரயிலிலிருந்து இறங்கினர். நான்கு நாட்கள்தானே ஆகின்றன. விரையில் வந்து விடுவார்' என்று சொன்னேன். ஆனால் அவர் அதிகமாகவே கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். ஆகவே உங்களிடம் சென்று புகார் செய்யுமாறு நான்தான் அனுப்பி வைத்தேன். வழக்கமாக எதிர்பார்ப்பதுபோல் நீங்கள் என்னை விசாரிப்பதற்கு விரும்புவீர்கள் என்றும் எண்ணினேன்.''

''நல்லது. உங்கள் இருவரது பயணத்தைப் பற்றியும் சிறிது விளக்கமாகக் கூறமுடியுமா?''

''தாராளமாக! சென்னை சென்ற நாங்கள் சென்ற திங்கள் கிழமை இரவில் பாண்டியன் எக்ஸ்பிரஸில் புறப்பட்டோம்.''

''உங்கள் பழைய திட்டப்படி இன்னும் ஒரு வாரம் கழித்துத்தான் சென்னையிலிருந்து திரும்ப வேண்டும் என்று கேள்விப்பட்டேன்.''

''உங்கள் ரகசிய இலாக்காவின் திறமைக்குப் பாராட்டுக்கள்!''

''பாராட்டுக்களுக்கு நன்றி! முன்னரே திரும்ப நேர்ந்ததற்குக் காரணம்?''

''அதில் ரகசியம் ஒன்றுமில்லை. இங்கு அவசரமாக முடிக்க வேண்டிய வேலை ஒன்றிருந்தது. அது பற்றி உங்களுக்கு



முழு விவரம் வேண்டுமானால் அலுவலகக் குறிப்புக்களுடன் விளக்க முடியும்.''

''தேவையில்லை; மேலே தொடருங்கள்.''

''வண்டியில் வந்து கொண்டிருக்கும் போதே பல விவரங்கள் பேசிக் கொண்டு வந்தோம். திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டு தாம் வழியில் திருச்சியில் இறங்கப் போவதாகக் கூறினார். 'என்ன விஷயம்?' என்றேன். 'ஒரு சிறிய சொந்த வேலை. அதை முடித்துக் கொண்டு செவ்வாய் மாலையிலேயே மதுரை வந்து சேர்ந்து விடுவேன்' என்றார். ஆனால் இன்று வரை வந்து சேரவில்லை.''

''அவ்வளவு தானா?''

''அவ்வளவேதான்! இது ஒரு சிறிய விஷயம். இன்று இல்லாவிட்டால் நாளை வந்து சேர்ந்து விடுவார்.''

''முத்துவேல், அதுதான் தணிகாசலம் அவர்களின் தம்பி, அப்படி நினைக்கவில்லை.''

''அப்படியா? வேறு எப்படி அவர் நினைக்கிறார்?''

''அதற்குப் பிறகு வருகிறேன். அவர் திருச்சியில் இறங்கும்போது நீங்கள் விழித்துக் கொண்டுதானே இருந்தீர்கள்?''

''என்னை எழுப்பி விட்டு என்னிடம் விடை பெற்றுக் கொண்டுதான் இறங்கினார்.''

''உங்கள் டிக்கெட்டுகளின் எண்களைச் சொல்ல முடியுமா?''

''ஆஹா!''

டயரியைப் புரட்டிப் பார்த்து, ''என்னுடைய எண்: 394567, அவருடைய எண்: 394568'' என்றார்.

இன்ஸ்பெக்டர் தம் பையிலிருந்து ஒரு சீட்டை எடுத்தார். அதைக் கூர்ந்து கவனித்தார்.

''என்னிடம் இருப்பது செவ்வாயன்று காலையில் பாண்டியன் எக்ஸ்பிரஸில் மதுரை வந்து சேர்ந்து கேட்டில் அளிக்கப்பட்ட முதல் வகுப்பு டிக்கெட்டுகளின் லிஸ்ட்.''

''..................''

''ஏன் ஒரு மாதிரியாகப் பார்க்கிறீர்கள்?''

''....ம்.... ஒன்றுமில்லை.''

''இதே போல் திருச்சி ரயில் நிலையத்தில் விசாரித்தால் உங்கள் பார்ட்னரின் எண்ணும் இருக்கும் என்று நினைக்கிறேன்.''

''அவ்வளவு உறுதியாகச் சொல்ல முடியாது. அவர் கேட்டில் டிக்கட் கொடுக்காமலேயே கூடச் சென்றிருக்கலாம் அல்லவா? அது அவ்வளவு நல்ல பழக்கமில்லை என்றாலும் சிலர் அப்படிச் செய்கிறார்களே!''

''ஆனால் நீங்கள் உங்கள் டிக்கெட்டைக் கேட்டில் கொடுத்திருக்கிறீர்கள்.''

''ஆமாம்! ஆமாம்! நான் பொதுவாக நல்ல வழக்கங்களையே பின்பற்றுபவன்.''

''என்ன ஆமாம்! இந்த லிஸ்டில் உங்கள் எண் இல்லையே!''

''...சற்று முன் இருப்பதாகச் சொன்னீர்களே!''

''அது உங்களை மாட்ட வைத்த கண்ணி. நீங்கள் மதுரையிலும் இறங்கவில்லை; அவர் திருச்சியிலும் இறங்கவில்லை.''

''.........''

''நீங்கள் இருவரும் திண்டுக்கல்லில் இறங்கினீர்கள்!''

''........''

''உங்களுக்கும் தணிகாசலத்துக்கும் வெகு நாட்களாகப் பகை. தீர்த்துக்கட்டச் சமயம் பார்த்திருந்தீர்கள். ஏதோ காரணம் சொல்லித் திண்டுக்கல்லில் அவரை இறக்கினீர்கள். நேராக டாக்ஸியில் இங்கு அழைத்து வந்தீர்கள். இங்கேயே அவரைத் தீர்த்துக் கட்டினீர்கள். அவரது உடல் இந்த வீட்டுத் தோட்டத்திலேயே புதைக்கப்பட்டிருக்கிறது.''

''...ஹா!...ஹா!...'' என்று சிரித்த ராஜகோபால், ''நல்ல கற்பனை!'' என்றார்.

''கற்பனை அல்ல; உண்மை!''

''ஏதேது. புதைத்து வைத்திருக்கின்ற உடலைத் தோண்டியும் எடுக்கப் போகிறீர்கள் போலிருக்கிறது.''

''போலிருக்கிறது அல்ல. தகுந்த ஏற்பாடுகளுடன் வந்திருக்கிறேன். வெளியில் ஸ்ட்ரெச்சருடன் ஆம்புலன்ஸ் வண்டி காத்திருக்கிறது. தோண்ட, எடுக்க ஆயுதங்களுடன் ஆட்கள் இருக்கிறார்கள். உடலை அடையாளம் காட்ட முத்துவேல் வந்திருக்கிறார்.''

மர்மச்
சிறுகதைப்
போட்டியில்
மூன்றாம் பரிசுக்
கதை:
2



"எங்கே சார், இவ்வளவு வேகமா படியிறங்கிப் போறீங்க ?"

"மாடியிலிருந்து என் கடிகாரம் கீழே விழுந்து விட்டது சார் !"

"அட கடவுளே, இத்தனை நேரம் அது தூள் தூளாயிருக்குமே !"

"இருக்காது சார். எப்பவுமே அது பத்து நிமிஷம் ஸ்லோ !"

-- ராமு

---

"உங்களுக்கு வெற்றி கிட்டட்டும்! நடத்துங்கள் உங்கள்...."

"நாடகத்தைத்தானே? நடத்துகிறேன். முக்கிய கதாபாத்திரமான நீங்கள் இந்த இடத்தை விட்டு அசையக் கூடாது. இந்த இருவரும் உங்களுக்குக் காவல் இருப்பார்கள்!"

"நான் அசையவில்லை."

இன்ஸ்பெக்டர் கான்ஸ்டேபிள்கள் இருவருக்கும் சைகை காட்டினார். இருவரும் ராஜகோபாலுக்குக் காவலாக இடம் பிடித்துக் கொண்டனர்.

சிவம் அறையை விட்டு வெளியே வந்தார். வாசலில் இருப்பவர்களை நோக்கிச் சத்தமிட்டார்.

"எல்லோரும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு இங்கு விரைந்து வாருங்கள்! முத்துவேல்! நீங்களும் வரவேண்டும்."

சிறிது நேரத்துக்கெல்லாம் ஐந்து பலசாலிகள், மண்வெட்டி, கடப்பாறை போன்ற ஆயுதங்களுடன் வந்து சேர்ந்தார்கள். அவர்களுடன் கவலை தோய்ந்த முகத்துடன் முத்துவேலும் காணப்பட்டார். எல்லோரும் புறக்கடைத் தோட்டத்தை நோக்கி விரைந்தார்கள்.

சுமார் முப்பது நிமிடங்கள் சென்றன. தோட்டத்தில் ஓர் இடத்தைத் தோண்டும் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஏகப்பட்ட ஆரவாரம்.

"அதோ... அங்கே!"

"பார்த்து... பார்த்து!"

"ஆஹா!.... இதுதான்!"

"கிடைத்து விட்டது.கிடைத்துவிட்டது!"

திடீரென்று முத்துவேலின் அலறல் : "அண்ணா! உனக்கு இந்தக் கதியா வர வேண்டும்!"

"கொண்டு வா ஸ்ட்ரெச்சரை."

சிவத்தின் அதிகாரக் குரல் ஆணையிட்டது.

ராஜகோபாலின் முகத்தில் வியப்பும் குழப்பமும் மாறி மாறித் தோன்றின. 'நம் கையாட்கள் நமக்கே வஞ்சகம் செய்து விட்டார்களா?'

ஸ்ட்ரெச்சர் வாசலிலிருந்து தோட்டத்துக்குச் சென்றது. மீண்டும் தோட்டத்தில் ஆரவாரம்.

"மெள்ள...மெள்ள"

"பார்த்து.... பார்த்து"

மீண்டும் முத்துவேலின் அலறல்.

ஸ்ட்ரெச்சர் திரும்பியது. அதில் இருந்த பிரேதம் நன்றாக மூடப்பட்டிருந்தது. முத்துவேல் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு வந்தார். ஸ்ட்ரெச்சர் ராஜகோபால் இருந்த அறையைக் கடந்து சென்றது. அவர் அறையிலிருந்தவாறே எல்லாவற்றையும் கவனித்தார். அவரது முகத்தில் பயக் குறிகள் தோன்ற ஆரம்பித்தன.

சிவம் அறைக்குள் வந்தார்.

"ராஜகோபால்! கொலையை மறைக்க யாராலும் முடியாது. உடலைக் கண்டுபிடித்து விட்டோம். உங்களுக்கு ஒரு மணி நேரம் அவகாசம் தருகிறேன். காவலாளர்களையும் வாபஸ் பெற்றுக் கொள்கிறேன். தனிமையில் சிந்தியுங்கள். பிறகு ஸ்டேஷனுக்கு வந்து வாக்குமூலம் கொடுங்கள். நாங்கள் இப்போதைக்கு விடைபெற்றுக் கொள்கிறோம்."

சிறிது நேரத்தில் வீடு காலியாயிற்று. ராஜகோபாலின் முகத்தில் குழப்பம் அதிகரித்தது. தோட்டத்துக்கு விரைந்து சென்றார். பாழடைந்த கிணற்றுக்குப் பக்கத்தில் ஓர் இடம் தோண்டப்பட்டிருந்தது. அந்த இடத்தை இரண்டு நாட்களாக அவரே கவனிக்கவில்லை. அவர் சந்தேகப்பட்டது சரிதான். தம் கையாட்களே தம்மை மாட்டி வைத்து விட்டார்கள். அவர்கள் கேட்ட தொகையைக் கொடுத்துத் தொலைத்திருக்க வேண்டும். இருந்தாலும் அந்த இடம் என்னவாயிற்று?

வீட்டை விட்டு வெளியே வந்தார். வீட்டைப் பூட்டினார். விரைவாகச் சென்று தமது காரில் ஏறி அதைக் கிளப்பினார். அது அசுர வேகத்தில் திண்டுக்கல் சாலையில் செல்ல ஆரம்பித்தது. வெகு தூரம் சென்றதும் வளைவு ஒன்றில் காரைத் திருப்பி வயலும் வெளியுமாயிருந்த ஊரை நோக்கிச் செலுத்தினார்.

ஆற்றுப் படுகைக்கு அருகில் வந்து கார் நின்றதும், அதிலிருந்து விரைவாகக் கீழே இறங்கினார். அவருக்கு இருந்த மனநிலையில் அக்கம்பக்கம் யார் வருகிறார்கள், யார் போகிறார்கள் என்று கூடக் கவனிக்கவில்லை. வேகமாக ஆற்றோரம் நடந்தார். வெகு நேரம் நடந்த பிறகு நாணற் புதர் ஒன்று தென்பட்டது. புதரைச் சிரமப்பட்டு விலக்கிக் கொண்டு உள்ளே சென்றார். கண்ணிலும் காதிலும் விழுந்து அழுக்கிய நாணற் கதிர்களை விலக்கிக் கொண்டே உள்ளே செல்வது அவ்வளவு எளிதாக இல்லை. சிறிது தூரம் அவ்வாறு சென்ற பிறகு திடுமென்று நின்றார். அவர் முகத்தில் தோன்றிய ஆச்சரியக் குறி மேலும் மேலும் விரிவடைந்தது. எல்லாம் அப்படியே இருந்தன. மேலே வைக்கப்பட்ட பாறுங் கற்கள், வெட்டி வைக்கப்பட்ட முட்கள் எல்லாம் அப்படியே இருந்தன. ஆம்! அந்த இடம்தான் அவர் தம் கையாட்களின் உதவியுடன் தணிகாசலத்தின் கதையை முடித்துப் புதைத்து வைத்த இடம். தம் கையாட்கள் தம்மைக் கைவிட்டுவிடவில்லை. அப்படியானால் அதெப்படி....? ஒரு வேளை...

ராஜகோபாலின் சிந்தனை அறுந்தது.

"நன்றி! ராஜகோபால்! நன்றி! இந்த இடத்தைக் கண்டு பிடிப்பதற்காகத்தான் இவ்வளவு நாடகமும்."

ராஜகோபால் திரும்பினார்.

இன்ஸ்பெக்டர் சிவம், நான்கு கான்ஸ்டேபிள்களுடனும், கையில் விலங்குடனும் காட்சியளித்தார்!

# பொங்கல் பெண் அழகி!

# 10%

## சிறப்புத் தள்ளுபடி

டிசம்பர் 31 முதல்
ஜனவரி 14 வரை

பொங்கலுக்கு பட்டு, பருத்தி, ரெடிமேட் துணி வகைகள் விதவிதமாய் உள்ளன. நாட்டின் பல பாகங்களிலிருந்து தருவிக்கப்பட்டவை.

உடனே வாருங்கள்.



## ஹேண்ட்லூம் ஹவுஸ்

9, ரத்தன் பஜார்,
சென்னை-600 003.

• ஞாயிறு கடை உண்டு

• சென்னை பொங்கல் சுற்றுலாக் காட்சியில் உள்ள எங்கள் பெவிலியனுக்கு விஜயம் செய்யுங்கள்.

ADWAVE HH/511

"நேர்த்தியாக மணக்கும்
லியூர் ஷாம்பூ
நேரமெல்லாம் மணக்கும்
அவர் நெஞ்சிலே"

என்கிறார் அனிதா ராபின்ஸ்—எக்ஸ்போர்ட். ஹவுஸ் நிர்வாகி.

நாலு வகையான புதிய லியூர் ஷாம்பூவிலே எதை எடுத்தாலும் அதற்குத் தனிமணம் உண்டு. சிகை எந்த வகையானாலும் சீராட்டும் அருமையிலே, ஆகா உங்கள் துணைவர் மனம் உங்கள் கூந்தலிலே சரணம்—தலைக்கேறிய உன்னதப் புதுமணம்.

என் கேசத்திற்கு வசீகரமூட்டுது லியூர். சுகந்தமான சுத்தமுடன் அதை சொகுசாக வைத்திருக்குது லியூர் ஷாம்பூ.

Lure

Creative Unit-A 2352 -Tam

# பார்த்திபன் கனவு

அத்தியாயம் 26

## குடிசையில் குதூகலம்

மறு நாள் பொன்னனும் வள்ளியும் பேசிப் பேசிச் சிரிப்பதற்கும் ஆச்சரியப் படுவதற்கும் எத்தனையோ விஷயங்கள் இருந்தன.

படகு கிளம்புகிற சமயத்தில் தீவர்த்திகளுடனும் ஆட்களுடனும் வந்து சேர்ந்த மாரப்ப பூபதிதான் என்ன ஆர்ப்பாட்டம் செய்தான்? என்ன அதிகாரதோரணையில் பேசினான். ''நிறுத்து படகை!'' பிடித்துக் கட்டு இரண்டு பேரையும்!'' ''விடாதே!'' ''படகைச் சோதனை போடு!'' என்று என்ன தடபுடல் செய்து விட்டான்?

இவ்வளவு தடபுடலுக்கும் பொன்னனும் வள்ளியும் அமைதியாக இருந்தார்கள். படகைச் சோதனை போடும் போது, அவர்கள் கரையிலேயே இறங்கி நின்று விட்டார்கள்.

படகில் ஒன்றும் இல்லையென்று கண்டதும், மாரப்பனுடைய முகத்தில் ஏமாற்றமும் கோபமும் கொந்தளித்தன.

''பொன்னா! எங்கே அது!'' என்றான்.

''எது, எங்கே, சேனாபதி?'' என்று கேட்டான் பொன்னன்.

''கையிலே என்னவோ கொண்டு வந்தாயே, அதுதான்!''

''என்னவோ கொண்டு வந்திருந்தால், அது என்னமாய் இல்லாமல் இருக்கும்?'' என்றான் பொன்னன்.

மாரப்பன் தன்னுடைய ஆட்களை விட்டு மரத்தடியிலும் தண்ணீரிலும் கூடத் தேடிப் பார்க்கச் சொன்னான். ஒன்றும் கிடைக்கவில்லை.

நடுநடுவே வள்ளி பொன்னன் காதோடு என்னவோ சொல்லிக் களிரென்று சிரித்தபடியால் மாரப்பனுடைய கோபம் அதிகமாயிற்று.

''இந்த அர்த்த ராத்திரியில் என்னத்துக்காக இங்கிருந்து திருட்டுத்தனமாகக் கிளம்புகிறீர்கள்? படகு ஏது?'' என்று கேட்டான்.

''காலையில் தோணித் துறைக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம் என்று இப்போதே கிளம்புகிறோம். எங்கள் பாட்டன் படகு; அதைத் தோணித் துறைக்குக் கொண்டு போகிறோம்'' என்று வள்ளி மறுமொழி சொன்னாள்.

''அரண்மனையில் புகுந்து நீங்கள் எதையோ திருடிக் கொண்டு வந்தீர்கள்; கொண்டு வந்ததை எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிறீர்கள். உண்மையை ஒத்துக் கொள்ளாவிட்டால், உங்களை இப்படியே கொண்டு போய்க் காராகிரகத்தில் அடைத்துவிடுவேன்'' என்றான் மாரப்பன்.

''எந்தக் காராகிரகத்தில் அடைப்பீர்கள்?'' என்றான் பொன்னன்.

''நீ என்னத்துக்காக அவரோடு சண்டையிடுகிறாய்? நாளைக்குச் சக்கரவர்த்தியின் சமூகத்தில் வழக்கைத் தீர்த்துக் கொண்டால் போகிறது!'' என்றாள் வள்ளி.

இதைக் கேட்டதும் மாரப்பனுடைய முகம் தொங்கிப் போய்விட்டது. சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு தன்னுடன் வந்திருந்த ஆட்களைப் போகச் சொல்லி விட்டுப் பொன்னனைப் பார்த்துச் சாவதானமாய்ச் சொன்னான்:

''இதோ பார், பொன்னா! உனக்கும் எனக்கும் பழக்கம் ஏற்பட்டது இப்போது அப்போதல்ல. சில சமயம் நமக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கிறதென்றால், அதற்கு உன் பெண்டாட்டியின் வாய்த் துடுக்குத்தான் காரணம்...''

''இவருடைய கையிலே துடுப்பு, என்னுடைய வாயிலே துடுக்கு...'' என்றாள் வள்ளி.

''நீ சற்றுப் பேசாமலிரு, வள்ளி! ஆண் பிள்ளைகள் பேசிக் கொண்டிருக்கும் போது நீ ஏன் குறுக்கிடுகிறாய்?'' என்றான் பொன்னன்.

''ஓகோ! நீங்கள் ஆண் பிள்ளைகளா? இருட்டிலே தெரியவில்லை. வெளிச்சம் போட்டுப் பார்த்

அமரர் கல்கி

தால் ஒரு வேளை தெரியும்!'' என்று வள்ளி முணு முணுத்தாள்.

மாரப்பன், ''பொன்னு! அவ்விதம் வள்ளியை நீ தள்ளிவிடவேண்டாம். நான் சொல்லுகிறது அவளுக்கும் தெரிய வேண்டியதுதான். உங்களால் எனக்கும் ஒரு முக்கிய காரியம் ஆகவேண்டியிருக்கிறது. அதை மட்டும் நீங்கள் செய்து கொடுத்தீர்களானால், உங்கள் உதவியை நான் மறக்கமாட்டேன். என்றாலும் உங்களுக்கு ஏதாவது ஒத்தாசை வேண்டியதாக இருக்கும். சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும்..'' என்றான்.

''உங்களைச் சிறு துரும்பு என்று யாராவது சொல்வார்களா, சேனாபதி?'' என்றான் பொன்னன்.

''சரிதான்; இந்தத் துரும்பினால் பல்லைக் குத்தினால், பல்லு உடைந்து போய் விடும்'' என்று வள்ளி முணுமுணுத்தாள்.

''என்னால் தங்களுக்கு ஆகக்கூடிய ஒத்தாசை என்ன இருக்கிறது? சேனாபதி! இந்த ஏழைப் படகோட்டி...''

மறுபடியும் வள்ளி குறுக்கிட்டு, ''நீ ஏழை என்றால் யாராவது நம்புவார்களா? உன்னை உருக்கினால் ஒரு ராஜ்யத்தை வாங்கலாமே....?'' என்றாள்.

மாரப்பன் கூடச் சிரித்து விட்டான். ''ஆமாம், பொன்னு! உன் பெயரே உனக்கு விரோதமாயிருக்கிறது. போகட்டும் நான் சொல்ல வந்தது என்னவென்றால், அந்தக் கபடச் சாமியார் இருக்கிறார் அல்லவா? அவர் இருக்கிற இடத்தை மட்டும் சொல்லிவிடு. அவரைப் பிடித்துக் கொடுப்பதாகச் சக்கரவர்த்தி குமாரிக்கு வாக்களித்திருக்கிறேன். உன் பேரிலும் வள்ளி பேரிலும் குந்தவிக்கு ரொம்பக் கோபம். நீங்கள் எனக்கு ஒத்தாசை செய்தால் குந்தவி தேவியிடம் உங்களைப் பற்றிச் சொல்லிக் கோபம் தீரும்படி செய்வேன்....''

''சேனாபதி நாங்கள் படகோட்டிப் பிழைப்பவர்கள்; யார் கோபம் எங்களை என்ன செய்யும்?'' என்றான் பொன்னன்.

''சிவனடியார் எங்கே இருக்கிறார் என்று சொல்ல மாட்டாயா?''

''தெரிந்திருந்தால்தானே சொல்லுவேன்!''

''அந்த வேஷதாரி சாமியார் இன்றைக்குக்கூட இந்த உறையூரிலேதான் இருக்கிறார். 'இல்லை' என்று சத்தியமாய்ச் சொல்வாயா?''

''அது எப்படிச் சொல்கிறது? சாமியார் மந்திர சக்தி உள்ளவராச்சே! எந்த நேரத்தில் எங்கே இருக்கிறாரோ, யாருக்குத் தெரியும்?'' என்றாள் வள்ளி.

''இந்தச் சமயம் அவர் எங்கே இருக்கிறார் என்று உனக்குச் சத்தியமாய்த் தெரியாதா?''



"சத்தியமாய்த் தெரியாது" என்று பொன்னனும் வள்ளியும் ஏக காலத்தில் உண்மையைச் சொன்னார்கள். நிஜமாகவே அவர்களுக்குத் தெரியாது தானே?

"இருக்கட்டும், பொன்னா! நான் மட்டும் மீசை முளைத்த ஆண் பிள்ளையானால், ஒரு நாளைக்கு அந்தச் சடைச் சாமியாரைக் கையும் மெய்யுமாகப் பிடித்து அவர் சடையைப் பிய்த்தெறிந்து, அவருடைய உண்மைச் சொரூபத்தை வெளிப்படுத்துவேன்! அப்போது உங்களையும் இலேசில் விடமாட்டேன்!" என்று கறுவிக் கொண்டே மாரப்பன் போய்ச் சேர்ந்தான்.

அவற்றையெல்லாம் ஒவ்வொன்றாய் இப்போது நினைத்துக் கொண்டு சிரித்த வள்ளி, "ஆகா! சாமியாருடைய சடையை மட்டும் நிஜமாகவே பிய்த்து விட்டுப் பார்த்தால்.... மனுஷன் உடனே மூர்ச்சை போட்டு விழுந்து விட மாட்டானா?" என்றாள்.

"ஆமாம், வள்ளி! அந்தச் சாமி யார் யார்? சொல்கிறேன், என்று



பயமுறுத்திக் கொண்டிருக்கிருயே ?'' என்று பொன்னன் கேட்டான்.

''பெட்டிக்குள் என்ன இருக்கிறது என்று நீ சொல்லு ; பிறகு சாமியார் யார் என்று நான் சொல்லுகிறேன்.''

''அதை நினைத்தால்தான் எனக்கு வேதனையாயிருக்கிறது ; பெட்டி மட்டும் கிடைக்காமற் போனுல்...ஐயோ ! மகாராணியின் முகத்தில் நான் எப்படி விழிப்பேன் ?''

'' அப்ட... என்னதான் அந்த அதிசயப் பெட்டிக்குள் இருக்கிறது ? சொல்லேன் !''

''அது அதிசயப் பெட்டிதான் வள்ளி! அதற்குள் சோழ வம்சத்தின் பரம்பரைப் பொக்கிஷம் இருக்கிறது. கரிகாலச் சக்கரவர்த்தியின் உடை வாளும், வள்ளுவர் பெருமான் தம் கையால் எழுதிய தமிழ் வேதச் சுவடியும் இருக்கின்றன. பார்த்திப மகாராஜா போர்க்களத்துக்குக் கிளம்பிய போது, அந்தப் பெட்டியை மகாராணியிடம் ஒப்புவித்தார். இளவரசருக்கு வயது வந்து சுதந்திர மன்னராகும் போது அவரிடம் ஒப்படைக்கும்படி சொல்லி விட்டுப் போனுர்.''

'' இத்தனை நாளும் அரண்மனையில் இருந்ததை இப்போது என்னத்துக்காக மகாராணி எடுத்து வரச் சொன்னுர் ? இளவரசருக்கு அனுப்பி வைக்கலாம் என்று ?''

''இளவரசருக்கு எப்படி அனுப்புகிறது ? அவர் இருக்கும் இடந்தான் யாருக்குத் தெரியும் ? பாவம் ! எந்தத் தண்ணீரில்லாத் தீவிலே என்ன கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கிருரோ ?...அதற்காக இல்லை, வள்ளி ! 'பல்லவ சக்கரவர்த்தி உறையூருக்கு வருகிருர்' என்ற செய்தி தெரிந்தவுடனே மகாராணி எனக்கு இந்தக் கட்டளையை இட்டார். பல்லவ குலத்தாரின் வழக்கம் தெரியுமோ, இல்லையோ ? நல்ல வேலைப்பாடான பொருள் எதைக் கண்டாலும் கொண்டு போய்விடுவார்கள். சிற்பிகள், சித்திரக்காரர்கள் இருந்தால், அழைத்துப் போய் விடுவார்கள். சுவரில் எழுதி யிருக்கும் சித்திரங்களை மட்டுந்தான் அவர்களால் கொண்டு போக முடியாது! அதற்காகத்தான் நமது பார்த்திப மகாராஜா உறையூரில் சித்திரக் காட்சி மண்டபம் மட்டும் ஏற்படுத்தியிருந்தார் ......!''

'' ஐயையோ ! அப்படியா சமாசாரம் ? எனக்குத் தெரியாமல் போச்சே !''

''அதனுதான் நான் சிவனடியாரிடம் பெட்டியைக் கொடுக்கத் தயங்கினேன். நீ 'கொடு கொடு' என்று அவசரப்படுத்தினுய்!''

''நான் என்ன செய்வேன்? அந்த அவசரத்தில், வேறு என்னதான் பண்ணியிருக்க முடியும்? இருந்தாலும், என் மனத்துக்குள் ஏதோ சொல்கிறது, பெட்டி பத்திரமாய் வந்துவிடும் என்று.''

'' வந்தால் நல்லதுதான், இல்லாவிட்டால் மகாராணியின் முகத்திலேயே நாம் விழிக்க முடியாது! ஆமாம்; அந்தச் சிவனடியார் யார், வள்ளி ? அவரைப் பற்றி உனக்கு என்ன சந்தேகம் ?''

அப்போது வள்ளி பொன்னன் காதோடு ஏதோ சொன்னுள். அதைக் கேட்டதும், அவனுக்கு உண்டான ஆச்சரியம் முகத்தில் தெரிந்தது. அதே சமயத்தில் வெளியில் குதிரைகளின் குளம்புச் சத்தம், பல்லக்குச் சுமப்பவர்களின் குரலொலி முதலியவை கேட்கவே, பொன்னன், வள்ளி இரண்டுபேருமே வியப்படைந்து குடிசை வாசலுக்கு வந்து பார்த்தார்கள். (தொடரும்)

For interesting and informative articles read **SWARAJYA** regularly

*Have you read SWARAJYA this week?*

**Where Markandeya obtained his boon of immortality** — *by N. Ramakrishna*

**Two decades of L.I.C. - a critique** — *by Prof. L. G. Bapat*

**Portugal to-day** - *by A. G. Noorani*

Annual subscription : Rs. 20/- Half Yearly Rs. 10/-

# “ஆறுகால்” ஸ்தோத்திரம் – II

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகள்



ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்கள் உலகத்திலுள்ள பேதைகள் எல்லாரும் ஆச்சரியப்படும்படியாக அத்வைத பாஷ்யங்கள் செய்திருக்கிறார். ஏற்கெனவே இருந்த 'பிரம்ம சூத்திரம்', உபநிஷத்துக்கள், 'பகவத் கீதை' முதலியவற்றை விளக்கி அவர் எழுதியதற்கு 'பாஷ்யம்' என்று பெயர். இது தவிர, தாமே (ஒரிஜினலாக) ''விவேக சூடாமணி'', ''உபதேச ஸாஹஸ்ரீ'' முதலான பல அத்வைத கிரந்தங்களைச் செய்திருக்கிறார். பாஷ்யத்திலிருந்து வித்தியாசம் தெரிவதற்காக, அவர் சொந்தமாகச் செய்த இது போன்ற நூல்களைப் 'பிரகரண கிரந்தங்கள்' என்பார்கள்.

இவற்றிலெல்லாம் சொல்லப்பட்ட அத்வைத தத்துவம் என்பது ரொம்பவும் பெரிய விஷயம். நாம் சத்தியமானது என்று நினைத்துக் கொண்டிருக்கிற இந்த ஜகத் ஒரு மாயை; பரமாத்மா ஒன்றுதான் சத்ய வஸ்து; அதற்கு வேறாக இருக்கிற ஜீவாத்மா என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கிற நாமும் வாஸ்தவத்தில் அந்தப் பரமாத்மா தவிர வேறே இல்லை; ஜீவனேதான் பிரம்மம் — என்பது தான் அத்வைதம். அறிவாலும், அநுபவத்தாலும், வேதப் பிரமாணத்தாலும் ஆசார்யாள் இந்த சித்தாந்தத்தை அலசி அலசி நிச்சயப்படுத்தி, பாறுங்கல் மாதிரி நிலைப்படுத்தியிருக்கிறார்.

ஆனாலும் இந்தப் பரம சத்தியமான தத்துவம் நம்மிலே பெரும்பாலோருக்கு எட்டவே மாட்டேன் என்கிறது. அறிவு மூலம் இதுதான் உண்மை என்று ஆசாரியாளின் வாதங்களைப் படித்து உறுதி ஏற்பட்டாலும் கூட, அநுபவம் என்று வருகிறபோது அத்வைதம் எங்கேயோ நாம் எங்கேயோ என்றுதான் அதற்கு ரொம்ப தூரத்தில் நிற்கிறோம். ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்று வெறுமே புத்தியால் தெரிந்து கொண்டு என்ன பிரயோஜனம்? ஓர் அசைவும் இல்லாமல் அப்படியே பரம சாந்தமாக இருந்து கொண்டிருக்கிற பிரம்மமாக நம்மை நாம் எங்கே தெரிந்து கொள்ள முடிகிறது? நமக்கு ஓயாத ஓட்டம்; ஓயாத அமைதியின்மைதான். மனஸின் ஓட்டமும், ஓடிக் கொண்டே இருக்கிற இந்தப் பிரபஞ்சமும்தான் நமக்குத் தெரிந்த உண்மை. மனஸ் நின்று விட்டால் இந்த ஓட்டம் இல்லை. அப்போது ஜகத் மாயையாக மறைந்து போய்விடும். நாம் பிரம்மமாக இருந்து கொண்டிருப்போம். ஆனால் மனஸ் நிற்கவே மாட்டேன் என்கிறதே! அதனால் அத்வைதம் என்பது நமக்குக் கொஞ்சம் கூட அநுபவத்தில் தெரிவதில்லை.

ஆனாலும் அந்த அநுபவத்துக்குப் போவதற்கு நாம் இங்கிருந்தே ஆரம்பித்துத்தான் ஆகவேண்டும். நாம் இருக்கிற நிலையில் நமக்கு சத்தியமாகத் தெரிகிறவைகளை வைத்துக் கொண்டே அநுஷ்டானங்களை ஆரம்பித்துப் படிப்படியாக, மேலே மேலே போய், இதெல்லாம் சத்தியமில்லை என்று தெரிந்து கொண்டு (தெரிந்து கொண்டு என்றால் சும்மா புத்தியால் தெரிந்து கொள்வதில்லை; அநுபவத்தில் தெரிந்து கொள்ள வேண்டும்), ஒரே சத்தியமான அத்வைத சித்தியை அடைய வேண்டும்.

ஆசாரியாளுக்கு நம் அவல நிலை தெரியாததில்லை. அவர் பரம கருணாமூர்த்தி. அத்வைத பாஷ்யமும், பிரகரண கிரந்தங்களும் மட்டும் நமக்குப் பிரயோஜனப்படாது என்று ஆசாரியாளுக்குத் தெரியும். ஆனதினால், அவர் அறிவிலும் அநுபவத்திலும் எவரெஸ்டாக இருந்தாலும், அந்த உச்சியிலிருந்து ரொம்பவும் இறங்கி நாம் இருக்கிற லெவலுக்கு வந்து நம்மைக் கைப்பிடியாக அழைத்துக்கொண்டு ஒவ்வொரு படியாக மேலே போகிறார்.

மனஸை நிற்கப் பண்ணுவதற்குப் பூர்வாங்கமாக, அதை நாலா திசையிலும் வெறி நாய் மாதிரி ஓடிக் கொண்டிருக்காமல் முதலில் கட்டுப்படுத்த வேண்டும். இதற்கு அவரவரும் ஸ்வதர்மப்படி கர்மா செய்து கொண்டே இருக்க வேண்டும். நமக்கென்று ஆசை, த்வேஷம் இல்லாமல், லோகோபகாரமாக நமக்கென்று வாய்த்திருக்கிற கர்மாவை அவரவரும் பண்ணிக் கொண்டிருப்பதே சித்த சுத்தியைத் தரும் என்பதால் ஆசார்யாள் கர்மாநுஷ்டானங்களை நம் எல்லோருக்கும் விதித்திருக்கிறார். 'கர்மா' என்பது ஓரளவுக்கு மனஸை மறந்து செய்கிற காரியம். வேலையிலேயே நம் குறி இருப்பதால் சித்தம் தறிகெட்டு ஓடிக் கொண்டிருக்கவிடாமல் பண்ணுகிறோம். இம்மாதிரி மனஸை மறந்து (ignore பண்ணி) காரியம் பண்ணுவதோடு, அதை நல்லதிலேயே பழக்கி, முழுக்கி, ஒருமுகப்படுத்த வேண்டும். மனஸுக்கு ஐகாக்கிரியம் (ஒருமுகப்படுத்தல்) ஏற்பட ஏற்படத்தான் அது அடங்கி, அப்படியே ஆத்மாவில் கரைந்துவிட வழி உண்டாகும். இதற்காகத்தான் அத்தனை நல்லதும் சேர்ந்ததான, சகல கல்யாண குண நிலய

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]



## மார்கழி

பனித்துளியில் கதிரவன் வண்ணக் கோலம்
வனிதையின் திறனுக்கு வாசல் கோலம்
இதயத்தில் இறைவனின் எழில் கோலம்
இதமாக ஒலிக்கின்ற இசைக் கோலம்

மேலட்டை வண்ணப் படம் : நரசிங்கம்

மான, ஸகுண மூர்த்தியிடம் பக்தி உபாஸனை செய்ய வேண்டும். மனஸ் அப்படியே ஆனந்தத்தில் ரொம்பி அந்த மூர்த்தியிடம் ஒருமுகப்பட்டு நின்று விட்டால் அப்புறம் கண்ட கண்டபடி ஓடாது. அந்த இஷ்ட மூர்த்தி ஒன்றிடமே பதிந்து நிற்கும். பிறகு அந்த மூர்த்தியின் அநுக்கிரகத்தால், இப்படிப் பிரிந்திருந்து அதன் குணங்களை அநுபவிப்பது என்றில்லாமல், அதற்கும் மேலே போய், அதிலேயே கரைந்து நிர்குணமான பிரம்மமாக ஆகிவிடலாம்.

இதற்காகத்தான் ஆசார்யாள், கர்மாநுஷ்டானம் மாதிரியே பக்தி உபாஸனையையும் நம்மெல்லோருக்கும் விதித்திருக்கிறார். விதித்தது மட்டுமில்லை. எப்படி பக்தி பண்ணுவது, எப்படிப் பிரார்த்தனை பண்ணுவது என்றே நமக்குத் தெரியவில்லை அல்லவா? இதை நமக்குச் சொல்லிக் கொடுக்கிற மாதிரி அவரே ஸகல தெய்வங்களின் மீதும் நெஞ்சை உருக்குகிற அநேக ஸ்தோத்திரங்களைச் செய்து நமக்கு அநுக்கிரஹித்திருக்கிறார். அம்பாள் மேல் செய்த ''ஸௌந்தர்ய லஹரி'', ஈச்வரன் மேல் பண்ணின ''சிவானந்த லஹரி'' இரண்டும் நூறு நூறு சுலோகம் கொண்டது. இவ்வளவு பெரிதாக இல்லாமல் சின்னச் சின்னதாகவும் ஒரு தெய்வம் மிச்சமில்லாமல் — யார் யாருக்கு எது இஷ்ட தெய்வமானாலும் அதை அவர்கள் மனம் உருகி ஸ்தோத்திரம் பண்ணி அந்த இஷ்ட மூர்த்தியின் அநுக்கிரகத்தைப் பெறுகிற மாதிரி — நிறைய ஸ்தோத்திரங்கள் பண்ணியிருக்கிறார்.

இவற்றில் சிலவாவது நம் எல்லோருக்கும் மனப்பாடமாகத் தெரிந்திருக்க வேண்டும். ரொம்பவும் உசந்த தத்துவங்களையும், உள்ளத்தைத் தொடும்படியான ரஸங்களையும், பரம லளிதமான சுலபமான வாக்கில் சொல்வதே ஆசாரியாளின் பெருமை. நம் மண்டையை உடைக்கிற அத்வைத பாஷ்யம் பண்ணினவரே சின்னக் குழந்தைகூட ரஸித்துச் சொல்லிப் பிரயோஜனம் அடையும்படியான ஸ்தோத்திரங்களைச் சின்னதும் பெரிதுமாக, ஏராளமாக அநுக்கிரகம் செய்திருக்கிறார்.

அதிலே ஸாக்ஷாத் ஜகத் பரிபாலகனான மகாவிஷ்ணுவைப் பற்றி ரொம்பவும் உயர்ந்த கருத்துக்களும், மனஸை உருக்கும் பாவமும், வாய்க்கு—அமிருதமாக இருக்கிற வாக்கும் கொண்டதான ''ஷட்பதீ ஸ்தோத்திரம்'' என்பது ஒன்று. சின்ன ஸ்தோத்திரம் தான். அதை நன்றாக மனதில் வாங்கிக் கொண்டு விட்டால் நாம் ஆசாரியாளையும் தெரிந்து கொண்டு விடலாம்; மகாவிஷ்ணுவையும் தெரிந்து கொண்டு விடலாம்; நம்மையும் தெரிந்து கொண்டு விடலாம். நம்மைத் தெரிந்து கொள்கிறபடி தெரிந்து கொள்வது தான் அத்வைதம். அந்த உச்சாணி வரைக்கும் இந்த ஷட்பதீ நம்மை அழைத்துக் கொண்டு போய்விடும்.

''ஷட்-பதீ'' என்றால் ''ஆறு கால் கொண்டது'' என்று அர்த்தம்.

அதென்ன, ''ஆறு கால் ஸ்தோத்திரம்?''

(தொடரும்)



## திருவோத்தூர்த் திருப்பணி

தொண்டை நாட்டில் பல்லாற்றானும் சிறந்து விளங்கும் காஞ்சிமா நகரில் உள்ள கோயில்களோடு ஒருங்கெண்ணத் தக்கது திருவோத்தூர் என்னும் திருத்தலம் என்று காஞ்சிப் புராணம் கூறுகின்றது.

இங்கு கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இளமுலையம்மையை இடப்பால் பெற்று விளங்கும் வேதபுரீசுவரர் திருக்கோயில் பல நூறு ஆண்டு பழைமையானது. இத் தலத்துப் பெருமானை வழிபட்டுத் திருஞானசம்பந்தர் ஆண் பனை பெண் பனையாய்க் காய்க்குமாறு பதிஞெரு பாசுரங்கள் பாடியுள்ளார். இத் தலம் புழுவாய்ப் பிறக்கினும் முத்திப் பேறு கிடைக்கும் என்ற வரலாற்றுப் பெருமையுடையது. இத்தகு சீர்மை பெற்ற தலத்தின் திருக்கோயில் திருக்குடமுழுக்கு விழாவை 1977 ஜனவரித் திங்களுக்குள் நிறைவேற்ற உறுதி பூண்டுள்ளனர். குடமுழுக்கு விழாவை ஒட்டிப் பல்வேறு திருப்பணிகள் நிறைவேற உள்ளன. ஆகவே இறையன்பில் திளைக்கும் பெருந்தகையோர் அன்பு கூர்ந்து தம்மால் இயன்ற பொருளுதவியைப் பொருளாளர், திருக்குடமுழுக்கு விழாக் குழு, திருவோத்தூர், செய்யாறு, வட ஆர்க்காடு மாவட்டம் என்ற முகவரிக்கு உயர்ந்த அளவில் வழங்கி மறைபுரிப்பெம்மான் திருவருளுக்குப் பாத்திரராகுமாறு வேண்டுகிறோம்.

மும் முகம் எங்கள் மோகம்

ஒட்டி நின்ற நாம் இருவர்...
உறவுக்கொரு கடல், ஒன்றுபட்ட உணர்வு.
கட்டழகர் அவர் நெஞ்சம் கடலாழம்,
சட்டையோ கடல் நீலம்... அதற்கு
ஒட்டி இசைந்திடுதே என் உடுப்பு;
தொட்டணைக்குதடி அலைக்கரங்கள்.




என்றும் அவர்கள் ஆடை... இயற்கையாக மபத்லால்.

மபத்லால் துணிவகைகள்:
சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
• டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷர்ட்

everest/463/MS-tm

## 1. இயந்திர வாழ்வா? இயற்கை வாழ்வா?

# விஞ்ஞானக் கதைகளும் வியப்பூட்டும் நிலைகளும்!

'விஞ்ஞானம்-நல்ல வேலைக்காரன் ஆனால் மோசமான எஜமானன்' என்று ஆங்கிலத்தில் கூறுவதுண்டு. நாம் அதை ஆளுகையில் ஏற்படும் விந்தை மிகு நன்மைகளையும், அது நம்மை ஆண்டால் விளையக்கூடிய எண்ண வொண்ணாப் பயங்கர விளைவுகளையும் அநேக கோணங்களில் அலசியுள்ளார் சுஜாதா. 'நகர் வலம்', 'கால யந்திரம்' தவிர இதர கதைகள் எல்லாமே விஞ்ஞானத்தால் விளைந்து விடக் கூடிய விபரீதங்களைத்தான் தெளிவாகக்காட்டு கின்றன. பறக்கும் டாக்ஸியும், விண்வெளிப் பிரயாணங்களும், கேட்ட தகவலைத் தருவது மட்டுமின்றி, நினைக்கவும் முடியாதவைகளை யும் சாதிக்கும் கம்ப்யூட்டர்களும் விஞ்ஞா னத்தின் விழுமிய வளர்ச்சியால் நமக்குக் கிடைக்கக் கூடிய மிக மிக சௌகரியமான வாழ்க்கையைக் காட்டுகின்றன. அதே சம யம் அவற்றால் நிகழ்ந்துவிடக் கூடிய பேரா பத்துக்கள்தாம் நம்மைப் பொறிகலங்கச் செய் கின்றன. இயந்திர மயமாக எல்லாம் ஆகி விட்டால் மனிதனும் ஓர் இயந்திரமாகிவிடு கிறான். எனவே ஓர் இயந்திரம் மற்றோர் இயந்திரத்துக்குப் பயன்படும் நிலைதான் உண் டாகிறது. இயந்திரம் மனிதனுக்குப் பயன் படவில்லை; விஞ்ஞானத்தாலே வேர் அறுக்க முடியாத அடிப்படை உணர்ச்சிகளால் 'ஒன்பதாவது பெண்' நித்யா அடைந்த அமைதியின்மை இயற்கையான வாழ்க் கைக்கே இழுக்கிறது நம்மை. அவளே கேலியாகத்தானே எண்ணிப் பார்க்கிறாள், விஞ்ஞானத்தால் விளைந்துவிட்ட அதியற்புத சௌக்கியங்களை யெல்லாம்!

அணு விஞ்ஞானத்தின் அளப்பரிய சாதனை களால் நாம் வாழ்க்கைத் தரத்தில் உயரே உயரே இன்னும் உயரே போகலாம் என்று எண்ணத் தொடங்குவதற்குள், 'அது முடி யாது. கீழே கீழே இன்னும் கீழேதான் போக லாம்; சூரியனைக்கூடக் காண முடியாத பொரு ளாக்கிவிடும் கீழுலக வாழ்க்கையை அடைய நேரிடலாம்' என்ற உண்மை 'சூரியனைத்' திகைக்கிறது. ஜோஸியர் சொல்வது சில சமயம் பலிக்காமல் போகலாம். கம்ப்யூட்டர் சொல்வது அப்படி யல்லவே. அது எதிர் காலத்தையும் இறப்பு நாளையும் மிகச் சரி யாகக் குறிக்க ஆரம்பித்தால் இருக்கும் போதே மனிதர்கள் இறந்தவர்களாகிவிடும் விபரீதத்தைக் 'காலமானவரில்' காண்கிறோம். சாக்காட்டையே அனுதினமும் நினைத்து அலைபாயும் மனநிலை மிகக் கொடியதல்லவா!

பண்பை வளர்க்க வேண்டிய பழந்தமிழ், பாவச் செயலாம் உலகத் துரோகத்துக்கு (தேசத் துரோகம்கூட அல்ல) உடந்தை யாவதைக் காணும்போது உள்ளம் எரிமலை யாகக் குமுறுகின்றதே! 'மரம் வைத்தவன் தண்ணீர் விடுகிறான்' என்றும், 'எல்லாம் அவன் செயல்' என்றும் இறைவனை நம்பியே

## விஞ்ஞானக் கதைகளும் வியப்பூட்டும் நிலைகளும்!

சுஜாதாவின் விஞ்ஞானச் 'சிறுகதை களைப் படித்துவிட்டுக் கட்டுரை வரையு மாறு கல்லூரி மாணவர்களுக்கு வைத் திருந்த போட்டியில் நான்கு மாணவர்கள் பரிசு பெறுகின்றனர்.

**ஜி. குரு, III பி.ஏ. (பொருளாதாரம்)**

ஏ. வி. வி. எம். ஸ்ரீபுஷ்பம் கல்லூரி, பூண்டி, தஞ்சை மாவட்டம்

**பி.எஸ். ராகோத்தமன் II பி.ஈ.**

பி. எஸ். ஜி. டெக்னலஜி கல்லூரி, கோயமுத்தூர்.

**ப. கந்தசாமி**

இளமறிவியல் இறுதியாண்டு, தூய சவேரியார் கல்லூரி, பாளையங் கோட்டை.

**சுபத்ரா பார்த்தசாரதி**

பௌதிகம் முதலாண்டு, ஸ்ரீ சாரதா கல்லூரி, சேலம்.

இந்நால்வருக்கும் தலா ரூ. 25 அல் லது அத்தொகைக்கு ஈடாக இவர்கள் விரும்பும் புத்தகங்கள் அனுப்பப்படும். தங்கள் விருப்பத்தைத் தெரிவித்து இவர்கள் எமக்கு எழுதலாம்.

இந்த இதழில் ஒரு கட்டுரை பிரசுர மாகிறது. மற்ற கட்டுரைகள் கல்கியில் அவ்வப்போது இடம் பெறும்.

— ஆசிரியர், கல்கி, சென்னை—31

இருந்துவிடும் வாழ்க்கையில்தான் எத்தனை நிம்மதி! நல்லதும் தீதும் நாமறிவோமா முழுவதும்! நாம் கத்தியால் கிழித்தால் குற்றம்; மருத்துவர் கிழித்தால் சேவையன்றோ! இந்நிலையில் 'இருக்க வேண்டியவர்களை' ஓசையின்றி ஆட்குறைப்புச் செய்ய நமக்கு ஏது உரிமை? கம்ப்யூட்டர்களின் மூளையை நம்பியே இந்தக் காரியங்கள் எல்லாம் நாம் செய்தால், நமக்குத் தஞ்சம் அளிக்கும் ஒரே 'வாசல்' நரக வாசலாகிவிடுகின்றது. பெரியவர்கள் விஷயமே இப்படி இருக்கையில், குழந்தையைக் கொல்லும் பாவத்தை நினைக்கவே மனம் நடுங்குகிறது. 'திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுபவை' என்ற நினைப்புடன் நிம்மதியாக வாழ்கிறோம் நாம். Q – டிபார்ட்மெண்டின் அனுமதிப் பிரச்னை குழந்தைக் கொலையில் அன்றோ முடிகின்றது? இதற்கொரு 'ரூல் நம்பர் 17'! இத்தகையவிஞ்ஞான வளர்ச்சிக்குப் போடவேண்டும் 144.

விஞ்ஞான உலகில் 'நகர் வலம்' வரும் போதுதான் நம் மனம் சற்றே உல்லாசம் அடைகிறது. புராதனப் பொருள்களை எத்தனை வருடங்களுக்கு வேண்டுமானாலும் காத்துக்கொள்ள விஞ்ஞானம் உதவுவதாய்க் காணுகையில் உண்டாகும் மகிழ்ச்சியைத் தான் சொல்கிறேன். கலப்பில்லாத மகிழ்ச்சியைக் காட்டும் ஒரே கதை 'நகர்வலம்' தான். 'கால யந்திரம்' நம் உள்ளத்தில் ஏற்படுத்துவதெல்லாம் ஹாஸ்ய உணர்ச்சியே. அதை ஒரு fiction என்றுதான் சொல்ல வேண்டும். மற்ற கதைகளும் அந்த வகையே ஆனாலும் அவற்றுள் சில கூறும் விஷயங்கள் எதிர்காலத்தில் Facts ஆகிவிடலாம். 'காலயந்திரம்' அத்தகையதல்ல. மொத்தத்தில் விஞ்ஞானக் கதைகள் விதைத்திட்ட உணர்ச்சிகளில் திக்குமுக்காடிய உள்ளம் விழைவது 'இப்போதுள்ள வாழ்க்கை இப்படியே நிலைத்திடும்' நிம்மதியான 'யயாதி' நிலையையே.

'தேவன் வருகை' பற்றிய உண்மை?....கதையில் நிதர்சனமாகக் கூறப்படவில்லை.... இன்றுள்ளது போன்றே அவரவர் மனோபாவத்துக்குகந்த பதிலை வைத்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிட்டது சுஜாதாவின் எழுத்துத் திறமையின் சிகரம். ஆனால் ஒன்று கவனிக்கத்தக்கது. தேவன் வருகையை அறியும் தருணம்... அதிகாலை ஐந்து ஐம்பத்தெட்டு... அந்த நேர நிகழ்ச்சியை விளக்கும் இடமோ... நிர்க்குண பிரம்மத்தைப் போலவே நிஷ்களங்கமான – கறுப்பு மை எழுத்துக்கள் கலக்காத தூய வெண்மை!

–ஜி. குரு

புகைப்படம்: சுஜாதா



## சென்ற இதழில்....

சங்கரி என்ற தன் பெயர் பிடிக்காமல் லாவண்யா என்று மாற்றிக் கொண்டாள் அவள். பெற்றோர் வைத்த பெயர் மட்டும்தானா பிடிக்கவில்லை? கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்ற அவளுக்கு, தன் அப்பா ஒரு சமையல்காரராக வேலை பார்ப்பது பிடிக்கவில்லை. குடும்பத்தின் வறுமை நிலையும் பிடிக்கவில்லை. அவள் மதுரைக்கு வரும் அயல் நாட்டுச் சுற்றுலாப் பயணிகளுக்கு 'கைடா'கப் பணியாற்றித் தினம் இருபது ரூபாய் சம்பாதித்தாள். அதில் பெரும் பகுதியைச் சேமித்து வைத்தாள், தனது திருமணத்துக்கென்று. அதற்கு அப்பாவை மட்டும் நம்பிப் பிரயோஜனமில்லை என்பது அவளுக்குப் புரிந்திருந்தது. எல்லாப் பெண்களையும் போல் தானும் ஒருவனுக்கு மனைவியாகி அப்புறம் தாயாகி அவர் பின் ஓடுற ஓட்டத்தில் கலந்துவிட வேண்டும் என விரும்பினாள்.

ஆனால் தன் ஆசைக் கனவுகள் நிறைவேற அவள் சேமித்த பணத்துக்கு ஆபத்து வந்துவிடும் போல் இருந்தது. அம்மா அந்தப் பணத்தில் ஒரு கணிசமான பகுதியைக் கேட்டாள்.

ஏன், எதற்கு என்றுகூட வினவாமல் நிர்த்தாட்சண்யமாக முடியாது என்று கூறிவிட்டு 'கைடா'கத் தன் கடமையாற்றப் புறப்பட்ட லாவண்யா டவுன்ஹால் ரோட்டில் வழக்கம்போல் அட்வகேட் ரமணியைச் சந்தித்தாள். அவன் ஏன், எதனால் தன்னைத் தயங்க வைக்கிறான் என்பது அவளுக்கு இன்றுவரை புரியாத புதிராக இருந்தது.

''குட்மார்னிங் லாவண்யா. அப்பாவுக்கு உடம்பு தேவலையா?'' என்று வினவிய ரமணி, அவளிடமிருந்து சரியான பதில் வராதது கண்டு, ''சரி, நானே விசாரித்துக் கொள்கிறேன்'' என்று புறப்பட்டான்.

'அப்பாவுக்கு என்ன உடம்பு? அம்மா பணம் கேட்டதற்கும் அதற்கும் ஏதாவது தொடர்பிருக்குமோ?' என்று யோசித்தபடியே பாண்டியன் ஹோட்டலுக்குச் செல்லும் பஸ்ஸைப் பிடிக்க விரைந்தாள் லாவண்யா.

---

கபிலருக்கு ஒரு ஃப்ரண்ட். அவருடைய நேம் இடைக்காடர். இடைக்காடருக்குப் பொழுது போகவில்லை. பாடல் இயற்றினார். பிரசுரிக்கப் பத்திரிகைகள் இல்லாததால் நேரே பாண்டியனிடம் போனார். பாண்டியன் ஒரு பெரிய கவிஞர். மிஸ்டர் இடைக்காடரை அலட்சியம் செய்தார். எழுத்தாளனுக்கு வரும் கோபம் இ.கா.க்கும் வந்தது. கோயில் கதவு திறந்திருந்ததால் நேரே அங்கே போய், தமிழ் அறியும் பெருமானுகிய சோமசுந்தரரிடம் ரிப்போர்ட் செய்தார். பாண்டியன் உண்மையில் பெருமானைத்தான் இகழ்ந்திருப்பதாக வத்தி வைத்தார். த.அ.பெ.க்குக் கோபம் வந்தது.

அன்று இரவு சோமசுந்தரர் தம் ஒய்ஃப் மீனாட்சியையும் அழைத்துக் கொண்டு வெளியேறி, வைகைக் கரையில் டேரா போட்டார். அப்புறம் பாண்டியன் கெஞ்சிக் கூத்தாடி அவரைப் பெரிய கோயிலுக்கு அழைத்து வந்தான்.

வைகைக் கரையில் ஓர் இரவு டேரா போட்ட இடத்தில் ஒரு கோயில் கட்டப்பட்டது. அதுதான் பழைய சொக்கநாதர் கோயில்.

— ப. சொ. கோயிலின் ஸ்தல புராணம்.

### 2

சிம்மக் கல் சுந்தரேசன் ஒரு சரித்திர புருஷன் அல்ல. ஒரு சரித்திரத்தை உரு






வாக்கப் போகிறேன் என்று உகாண்டா இடி அமீனைப் போல மார் தட்டியவனும் அல்ல. ஆனால் அவனுடைய புகழ் மதுரையில் பிரசித்தம். அதுவும் நான்கு வெளி, மாசி, சித்திரை, ஆவணி மூல, ஆடி வீதிகளில் கொடி கட்டிப் பறந்த புகழ். ஆந்திரம் கர்நாடகம் கேரளா போன்ற மாநிலங்களிலிருந்து வரும் சுற்றுலா பஸ்களை அவன் வளைத்துக் கொள்வான். அதன் பிறகு அவன் பேசும் பாஷையே தனி. சிற்சில சமயங்களில் வடநாட்டுப் பயணிகளும் அவரிடம் சிக்கிக் கொள்ளுவதுண்டு. அப்போதுதான் அவன் அடிக்கிற கொள்ளையில் பாதியை, மீரட்டில் ராணுவத்தில் வேலை பார்த்துக் கடைசியில், 'நம்ம மதுரையை விட்டால் வேறு ஊர் இல்லை' என்ற உறுதியுடன் திரும்பி வந்த 'அரை குறை இந்தி ஞானி' பாஷ்யம் தட்டிக் கொண்டுபோவான். இப்படி இந்தியில் உளறி, தன்னுடைய வரும்படியில் பாதியை அடித்துக் கொண்டு போகிறானே என்று சுந்தரேசன் வயிறு எரிவான்.

சுந்தரேசனுக்கு இப்போது வயது முப்பத்திரண்டு. நல்ல வேளையாக — (அவனுடைய நல்ல வேளை அல்ல—) இன்னும் கல்யாணம் ஆகவில்லை. ஆகி யிருந்தால் மனைவியை வைகையில் மண் சுமந்து பணம் சம்பாதிக்கவும் செய்திருப்பான் சுந்தரேசன்.

இந்த சுந்தரேசன் அன்று காலையில் எழுந்ததும் பல் தேய்த்துவிட்டு முகத்தைச் சோப்புப் போட்டுத் தேய்த்துக் கழுவினான். பிறகு பவுடரை அப்பிவிட்டு, அதை நாசூக்காகத் துடைத்துவிட்டான்.

கண்ணாடியைப் பார்த்தபோது அவனுக்கே, தான் குளித்துவிட்டதான பிரமை தட்டியது. இந்தப் பிரமையில், மூன்று விரல்கள் விபூதியை நெற்றியில் அச்சேற்றிவிட்டு, மீனாட்சி கோபித்துக் கொள்ளக் கூடாது என்ற பயத்தில் நட்ட நடுவே குங்குமத்தையும் பதிய வைத்தான்.

அவன் தூய வெள்ளை வேட்டி, சில்க் ஜிப்பாவுடன் வீட்டை விட்டு இறங்குகையில் மணி ஐந்தரை.

வாசலில் அத்தை பால் பாத்திரத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

'' நான் வரேன், அத்தே !''

'' சரிடாப்பா !'' என்றாள் ஜக்கு (ஜெகதாம்பாள் ஜக்குவாகி இருந்தது.)

சுந்தரேசன் சிம்மக் கல்லைத் தாண்டி, பழைய சொக்கநாதர் கோயிலை நோக்கி நடந்தான். எவ்வளவோ தடவைகள் மீனாட்சி கோயிலுக்கு அவன் தினமும் போய் வருகிறான். ஆந்திர, கர்னாடக, கேரள பயணிகளுக்குப் பற்பல விக்கிரகங்களைச் சாங்கோபாங்கமாக விவரித்திருக்கிறான். அவர்கள் கண்ணை மூடித் தெய்வங்களை வழிபடுகையில், அந்நேரத்தை ஓய்வு நேரமாகப் பயன்






நெப்போலியன் எல்பா தீவி லிருந்து தப்பித்து ஒரு பெரும் படையைத் திரட்டி, மறுபடியும் போருக்கு ஆயத்தம் ஆகி விட்டான். ஐரோப்பிய நாடுகள் நிலைகுலைந்தன. மறுபடியும் வெல்லிங்டன் பிரபுவையே எல் லோரும் தேர்ந்தெடுத்து நெப் போலியனுக்கு எதிராகப் படை நடத்திச் செல்லுமாறு கேட்டுக் கொண்டார்கள்.

1815 ஜூன் மாதம் 15ந் தேதி நெப்போலியன் படையுடன் பிரஸ்ஸல்ஸ் நகரை நோக்கி வந்து கொண்டிருந்தான். அன்று ரிச்மாண்ட் சீமாட்டி கொடுக்க விரும்பிய விருந்துக்கு வெல்லிங்டன் தயார் செய்து கொண்டிருக்கும்போது, நெப் போலியன் நெருங்கி விட்ட செய்தியைக் கேட்டு அவன் மிரளவில்லை. விருந்துக்கு நிதானமாகச் சென்று பரபரப்பு ஏற்படாத நிலைமை உண்டாக்கி, விருந்து நடந்து கொண்டிருக்கும்போதே, ரிச்மாண்ட் பிரபு விடம் ரகசியமாக ஐரோப்பிய தேசப் படமொன்றைப் பக்கத்து அறைக்குக் கொண்டு வரும்படி சொன் னான். நெப்போலியன் அப்பொழுது எங்கு வந்து கொண்டிருக்கிறான், எங்கு சந்திப்பது என்பதை யெல்லாம் யோசித்து, வாட்டர்லூவில் சந்திக்கவேண் டும் என்று தீர்மானம் செய்தான். மறுநாள் அதிகாலையில் நிதானமாகவும், கம்பீரமாகவும் குதிரை மீது அமர்ந்து தன் படையுடன் புறப்பட்டு விட்டான். 18ந் தேதி வாட்டர்லூவில் உலகப் பிரசித்தி பெற்ற, வரலாறு காணாத யுத்தத்தில் மாவீரன் நெப்போலியனைத் தோற்கடித்தான். கடை சியாக வெல்லிங்டன் சொன்னது: ''கடவுள் காப்பாற்றினார்.''

-ஆர். துரைராஜ்

---

படுத்தி வெற்றிலை சீவலை அவன் கைப் பையி லிருந்து எடுப்பான். அவன் வழிபாட்டுக்காக என்றுமே கோயிலினுள் கால் வைத்ததில்லை. பயணிகள் வந்தால்தான் சில்லறை. சில் லறைக்கு வழி இருந்தால்தான் அவனுக்குப் பெரிய கோயிலுக்கு வழி தெரியும்.

ஆனால் பழைய சொக்கநாதர் கோயில் அப்படி அல்ல. அவன் ஒரு நாளும் சொக்க னைப் பார்த்து, ஓர் அவசர சலாம் போடத் தவறியதே இல்லை. இந்தச் சொக்கன்தான் முன்னொரு காலத்தில், பெரிய கோயிலி லிருந்து இரவோடு இரவாகக் கோபித்துக் கொண்டு ஓடி வந்து, மீண்டும் திரும்பிப் போனவர் என்று அவனுக்குத் தெரியும். கோபித்துக் கொண்டு ஓடிப் போகிறவர் களைக் கண்டால் சுந்தரேசனுக்கு என்றுமே பிடிக்கும். அவனே அப்படிப்பட்டவன் தானே ?

சொக்கநாதரைத் தரிசனம் செய்துவிட்டு நேரே வடக்குச் சித்திரை வீதியை நோக்கி நடந்தான். அதன் கோடியில், வீதியைப் பார்த்துக் கொண்டு கோபி அய்யங்கார் ஹோட்டல் இருக்கிறது. சொக்கனைத் தரி சித்த கண்கள் அப்புறம் தரிசனம் செய்வது இந்த ஹோட்டலைத்தான். காலையில் இட்லி, சாம்பார், வடை, பொங்கல், மத்தியானம் சொஜ்ஜி அப்பம். சுந்தரேசனுடைய வைட மின்களும் புரதங்களும் இவற்றில்தான் அடக்கம்.

''வாப்பா, சுந்தரேசா!'' என்று ஒரு வயதான சிப்பந்தி வரவேற்றார்.

சுந்தரேசனுக்குச் சாம்பார் வடை பிடிக் கும் என்றால் சிப்பந்திக்கு ஹாக்கி பிடிக்கும். அவர் சின்ன வயசில் ஆடியிருக்கிறாராம்.

''ஹாக்கியிலே இந்தியாவும் போச்சு, பாகிஸ்தானும் போச்சு'' என்றான் சுந்த ரேசன், ஒரு புன்முறுவலுடன்.

''அவங்களுக்குச் செலவு செய்த பணத் தைக் கொண்டு அழகருக்கு ஒரு தங்கக் கவசம் போட்டிருக்கலாம்.''

''ஏன் அதைப் பெரிய கோயிலுக்குச் செய்யக் கூடாதோ ?'' என்றான் சுந்தரேசன்.

''பாகிஸ்தான் சம்மதிக்காது !'' என்றார் அய்யங்கார் சிப்பந்தி. பிறகு, ''ஆமாம், நேத்து யாரு ஒரு வெள்ளைக்காரக் கிழவி யின் கையைப் பிடிச்சண்டு போனே?'' என்று கேட்டார்.

''ஓ ! நேத்து சாயங்காலம்தானே ?'' என்றான் சுந்தரேசன், டபராவை எடுத்துக் கொண்டே. பிறகு சுற்று முற்றும் பார்த் தான். ஹோட்டல் காலியாகக் கிடந்தது. இரண்டு மூன்று சிப்பந்திகளைத் தவிர வேறு யாரும் இல்லை. இந்தக் கூட்டத்திடமா தன் பெருமைகளைக் கொட்ட வேண்டும் ?

''ஆமாம், யார் அவள் ?''

''பெல்ஜியத்திலேயிருந்து வந்திருக்கா ?... பெல்ஜியம் எங்கே இருக்கு தெரியுமா, அய்யங்கார் ?''

''உன்னைவிட ஜாகரபி எனக்குத் தெரியும். சொல்லு.''

''நேத்து திருவனந்தபுரத்திலேயிருந்து வந்தா. பாண்டியன் ஓட்டல்லே தங்கணும்னு போயிருக்கா... இடம் கிடைக்கலே. அவள் மங்கம்மா சத்திரத்து வாசல்லே நின்னுண் டிருந்தா. டாக்ஸியிலே சாமான் அப்படியே கிடக்கு. நான் டிரைவர் கிட்டே விசாரித் தேன். ரூமுக்காக அலையறான்னு தெரிஞ்சுது.. அவ்வளவுதான்...''

'' 'ஹலோ மேடம்'னு விழுந்திருப்பியே?''

''அதான் இல்லே... 'நல்ல டீஸண்ட் அகா மடேஷன்' வேணுமான்னு கேட்டேன். ஆமாம்னா. அடுத்தாப்லே எந்த ஊர்னு கேட்டேன். திருச்சின்னா. ரயிலான்னேன். ஆமாம்னா. அவ்வளவுதான்... நேரே ஜங்ஷ னுக்கு இழுத்துண்டு போனேன். ஸ்டேஷன் சூப்பிரண்டண்டைப் பார்த்தேன். ரிடயரிங் ரூம் கிடைச்சது. அவளுக்கு வாயெல்லாம் பல்!''

''ஏண்டா பார்த்தா கிழவியா இருக்கா... அவ வாயிலே ஏதுடா பல்?''

''இருந்ததே! அவளும் நானும் ஒரு அரை மணி நேரம் பேசிண்டிருந்தோம்.''

''தமிழ்லேயா?''

''என் இங்கிலீஷை அவ புரிஞ்சுண்டா... அப்புறம் ரெண்டு பேருமா கோயிலுக்கு வந்தோம். பார்த்தது திருப்தியா இல் லேன்னா. இன்னிக்குச் சரியா ஏழு மணிக்கு நான் ஜங்ஷனுக்குப் போகணும்...''

''ஜமாய்... பெல்ஜியத்தில் என்ன செய் யறா?''

# இருசுவை ஒன்றிலே இணைந்த

## காட்பரீஸ்
## சாக்கலேட் எக்லேர்ஸ்




குழந்தைகள்
விரும்பித் தேடும்,
பெரியோர் மனமும்
நாடும்!

காரமல் மூடிய
ஊட்டச்சத்து நிறைந்த
மில்க் சாக்கலேட்

C-1 TAM



## வாலிப - வயோதிக, அன்பர்களே !

வாலிப வயதில் செய்கிற தவறுதல்களே இப்போது உடல் கெட்டு பலவீனமடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலவீனம், உடல் வலி, தூக்கக் குறைவு, ஆயாசம், களைப்பு, பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி மனவேதனையும் கஷ்டமும் அடைந்து வாழ்கிறார்கள், 80 வருட அனுபவம்பெற்ற நமது மருந்துகள் சாப்பிட்டு வர புத்துணர்ச்சி பெற்று நிம்மதியாக வாழ்க்கை வாழலாம். வி. பி. பி. யில் பெற உடன் எழுதுக,

**ஒரு மாத மருந்துகள்**

**மிக உயர்தரம் செட் ரூ. 90, தங்கபஸ்பம், சிட்டுக்குருவி லேகியம் - 60 வேளை ரூ. 120 30 வேளை ரூ. 60.** போஸ்டேஜ் இலவசம். நேரில் ஆலோசனை பெற.

9ம் தேதி காஞ்சிபுரம்: ஸ்ரீ ராமா லாட்ஜ், காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரை

10ம் தேதி திருப்பத்தூர்: சங்கர் கபே, பகல் 1 முதல் 2-30 மணி வரை

10ம் தேதி ஆம்பூர்: N.A.B. லாட்ஜ், மாலை 3-30 முதல் 5 மணி வரை

11ம் தேதி வேலூர்: N.A. அஜீஸ் மேன்ஷன்ஸ், காலை 8 மணி முதல் 11 மணி வரை

11ம் தேதி குடியாத்தம்: அலங்கார் லாட்ஜ், பகல் 1 மணி முதல் 3 மணி வரை

12ம் தேதி பெங்களூர் ஸிடி: ஹோட்டல் பிராட்வே, காலை 8 மணி முதல் 3 மணி வரை

13ம் தேதி கிருஷ்ணகிரி: ஸ்ரீ ராம் லாட்ஜ், காலை 3 மணி முதல் 10 மணி வரை

13ம் தேதி தர்மபுரி: சீனிவாசா லாட்ஜ், காலை 11 மணி முதல் 12 மணி வரை

13ம் தேதி சேலம்: லக்ஷ்மி ராஜபவன் லாட்ஜிங், பிற்பகல் 2 மணி முதல் 5 மணி வரை

15ம் தேதி ஈரோடு: நவபவனம் லாட்ஜ், காலை 8 மணி முதல் 12 மணி வரை

15ம் தேதி திருப்பூர்: ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ், பிற்பகல் 2 மணி முதல் 4 மணி வரை

15ம் தேதி பொள்ளாச்சி: ஹோட்டல் தோஞ்சலி மாலை 5-30 மணி முதல் 7-30 மணி வரை

16ம் தேதி கோவை: விஜயா லாட்ஜ், காலை 8 மணி முதல் 3 மணி வரை

17ம் தேதி சென்னை: ஸ்ரீலேகா ஹோட்டல், மாலை 3 மணி முதல் 6 மணி வரை

18ம் தேதி சென்னை: ஸ்ரீலேகா ஹோட்டல், காலை 9 மணி முதல் 12 மணி வரை

19ம் தேதி பம்பாய்: பிரகாஷ் லாட்ஜ் (செம்பூர்) காலை 9 மணி முதல் மாலை 3 மணி வரை

20ம் தேதி பம்பாய்: பிரகாஷ் லாட்ஜ் (செம்பூர்) காலை 9 முதல் பகல் 2 மணி வரை

தியாகராயநகர் விற்பனை நிலையம்: 10/23, பாண்டி பஜார், ராஜகுமாரி தியேட்டர் எதிர்புரம், சென்னை - 17

கிளை: 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை - 1, போன்: 21448

வைத்திய திலகம், வைத்தியராஜ் டாக்டர் எஸ். காளிமுத்து R. M. P. (IND) V. V. C., A. M. I. H.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி - 624 601**

போன்: 316, 316A, வீடு: 420. பழைய தாராபுரம் ரோடு, பழனி. தந்தி: "சித்தர்"






அடுத்த வாரம் கல்கி பொங்கல் சிறப்பிதழ்!

பிரபல எழுத்தாளர்களின்

இரு சிறப்புச் சிறுகதைகள்

ஒரு சிரிப்புச் சிறுகதை

இந்தியா—எம்.ஸி.ஸி
காப்டன்களின் வண்ணப்படங்கள்

முத்தான மொரீஷஸ் பயணக் கட்டுரை


''தெரியல்லே. ஆறு பர்லெல்லாம் பணம்!''

''ஒரு அஞ்சாறு காரட் வைரம் அனுப்பச் சொல்லேன். பெல்ஜியத்திலே டைமண்ட் கட்டிங் ரொம்ப உசத்தி.''

''உம்ம காதிலேதான் ரெண்டு கடுக்கன் இருக்கே.''

''இது வெள்ளைடா, முட்டாள். உனக்கு வெள்ளைக்கும் வைரத்துக்கும் வித்தியாசம் தெரியாது'' என்றார் ஐயங்கார்.

''சொல்றேன். இந்த வயசிலே உமக்கு வைரக் கடுக்கன் மேலே மோகம் விழுந்து விட்டது. அதைத் தீர்த்து வைக்கலேன்னா எனக்கு ஜன்ம சாபல்யம் ஆகாது... நான் வரேன்.''

''கொஞ்சம் இருடா. சுந்தரேசா... ஒரு பத்து மணி சுமாருக்கு வாயேன்...அவளுக்குச் சுடச் சுட சொஜ்ஜி அப்பம் போட்டுத் தரேன்....''

''நினைவு வச்சுக்கறேன்'' என்ற சுந்தரேசன் கிளம்பினான்.

மேற்கு சித்திரை வீதிக்கு வந்து வலது புறமாகத் திரும்பி நடக்கலானான். மேற்கு கோபுர வாசல் தெருவின் இளங்காலை அமைதி ரம்யமாக இருந்தது. தானப்ப முதலிக் தெரு முனை வந்தபோது, திடீரென்று பாஷ்யத்தின் நினைவு வந்தது. இந்தப் பெல்ஜியக்காரியுடன் பேசிச் சமாளிக்க அவன் ஒருவனால் முடியுமா என்ற பயமும், பாஷ்யத்தை உதவிக்கு அழைத்துக் கொண்டால் என்ன என்ற யோசனையும் உதயமாகின. ஓரிரு நிமிடம் அங்கேயே நின்றான். நேற்று இரவு அவளை விட்டுப் பிரியும் முன் அவள் ஒரு பத்து ரூபாய் நோட்டை நீட்டினாள். ''டுமாரோ யு இவ்'' என்று சொல்லிவிட்டான் அவன். இன்றைக்கு அவள் திருச்சிக்கு ரயிலேறும் முன், இன்னும் ஓரிரண்டு நோட்டுக்களைச் சேர்த்து வீசப் போகிறாள். அதில் பாதியை பாஷ்யத்துக்குக் கொட்ட வேண்டுமா?

திடீரென்று பாஷ்யத்தின் மீது ஓர் அசாதாரண வெறுப்புப் பிறந்தது. 'நமக்கு இருக்கும் அரை குறை ஆங்கில பாண்டித்யத்துடன் கிழவியை நாமே சமாளிக்கலாம். நம்மிடமிருந்து பணத்தைப் பறித்துக்கொண்டு பாஷ்யம் அநியாயமாக ஊதிக் கொண்டு போகிறான். அவனுடைய உடல் வீக்கத்துக்கு நாம் பழி சுமக்கக்கூடாது.'

தானப்ப முதலித் தெருவை மறந்து அவன் நடக்கலானான்.

டவுன் ஹால் ரோடில் இருக்கும் பெருமாள் தெப்பக்குளத்தைக் கடக்கையில், திடீரென்று காக்காத் தோப்பும் அதில் குடியிருக்கும் லாவண்யாவும் நினைவில் மோதினார்கள்.

அவனுக்கு மட்டும் லாவண்யாவின் அழகு இருந்தால்? அடுத்த கணமே மனம் தன் நாக்கைக் கடித்துக் கொண்டது. லாவண்யாவின் அழகு இருந்தால் அவனும் அவளைப் போல ஒரு பெண்ணாகி விடுவானே?

மனத்தைத் திருத்திக் கொண்டான். அவன் மட்டும் லாவண்யாவைப் போலப் படித்திருந்தால்? இங்கிலீஷில் என்னமாய்ப் பொழிந்து தள்ளுவான்? கிடைக்கிற பணம் அனைத்தும் அவனுக்குத்தான். ஒரு பைசாகூட பாஷ்யத்துக்குப் போகாது. ஏன், இந்த ஆந்திர கர்நாடக பயணி பஸ்களையே அவன் அண்ட மாட்டான்! கதாகாலட்சேபத் தட்டுக்களில் விழும் ஐந்து பைசா, பத்துப் பைசா மாதிரி பிரயாணிகள் பத்துப் பைசாவிலிருந்து நாலணா வரை போட்டு அவனுக்குக் கொடுக்கிறார்கள். அதுவும் ஒரு நபருக்கு என்று இருந்தாலும் பரவாயில்லை. ஒரு குடும்பத்துக்கு கால் ரூபாய்! ஒரு பஸ்ஸில் பத்துப் பன்னிரண்டு குடும்பங்கள்! சீ, என்ன பிழைப்பு! பெல்ஜியம் மாதிரி, நாளுக்கு ஒன்று கிடைத்தால் போதும்.

இதற்கு லாவண்யாதான் கொடுத்து வைத்திருக்கிறாள். ஒரு தடவை காரில் மதுரையைச் சுற்றி வந்தால் இருபது ரூபாய்!

லாவண்யா எங்கே, அவன் எங்கே?

காலேஜ் ஹவுஸைத் தாண்டி நடக்கும் போதுதான், லாவண்யா கண்ணில்பட்டாள். முன்னால் சென்று கொண்டிருக்கும் அவளைப் பிடிக்க அவன் வேகமாக நடந்தான்.

டவுன் ஹால் ரோடின் கோடியில் வலது புறமாக நடந்து கொண்டிருந்தவள், வெளி வீதியின் இடப்புறமாகச் செல்லப் போகிறாள் என்பதைப் புரிந்து கொண்ட சுந்தரேசன், ஒரே பாய்ச்சலாக வீதிக்குக் குறுக்கே போய், தெரு முனையில் அவளைப் பிடித்தான்.



எல்லா விளம்பரங்களிலும் பிரதம மந்திரியின் போட்டோவையும் பெயரையும் போடுவதற்கு முன் பிரதம மந்திரியின் காரியாலயத்தைக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று ஓர் ஏற்பாடு செய்ய வேண்டும். -எக்னாமிக் டைம்ஸ்



அமிதாப்பச்சனுக்கு ஏற்பட்ட விபத்தால் உடம்பிலும் முகத்திலும் காயத் தழும்புகள் ஏற்பட்டு விட்டன. ''இனிமேல் நீங்கள் தழும்புக்காக மேக்-அப் செய்து கொள்ளத் தேவையில்லை. உண்மையாகவே கிடைத்துவிட்டன'' என்று அவருடைய டாக்டர்கள் ஜோக் அடித்தனராம். -சினி பிளிட்ஸ் - கே. ஆர்.

''குட்மார்னிங், மிஸ் லாவண்யா !''

''ஓ. நீங்களா ...''

''ஆமாம். உனக்கு இன்னிக்கு எங்கேஜ் மெண்ட் இருக்கா ?''

'' என் டிரஸ்ஸைப் பார்த்தா தெரியலேயா ?'' அவள் சிரித்துக் கொண்டே நடந்தாள்.

'' யார்?''

'' தெரியாது. பாண்டியன் ஹோட் டல்லே ஒரு குரூப் வந்திருக்கு!''

'' ஜங்ஷன்லே எனக்காக ஒரு பெல்ஜிய நாட்டுக்காரி காத்துக் கொண்டிருக்கிறாள்.''

''அப்ப ஏன் என் பின்னாலே ஓடி வரீங்க..? அவளைக் கவனியுங்களேன்.''

'' எனக்கு ஒரு சின்ன ஹெல்ப் வேணும்.''

''என்ன?''

''பெல்ஜியத்தின் காபிடல் எது ?''

''ப்ரூஸல்ஸ்.''

''ஏதாவது இரண்டு பெரிய ஊர் பேரு சொல்லுவியா ?''

''ஆண்ட்வர்ப்.''

''பெல்ஜியத்திலே வைரம் நிறைய வெட்டி எடுக்கிறார்களாமே...''

'' இல்லே... ஆப்பிரிக்காவிலே கிம்பர்லின்னு ஓர் இடம் இருக்கு. அங்கே வெட்டி எடுக்கிற வைரத்தை அப்படியே பெல்ஜியத்துக்கு அனுப்பரு. பெல்ஜியத்திலே பட்டை தீட்டி மற்ற நாடுகளுக்கு அனுப்பரு... ஏன் இதெல்லாம் கேட்கிறீங்க ?''

''இதை வச்சுண்டு இன்னிப் பூரா பேசிடு வேன். தாங்க்ஸ், நான் வரேன்.''

'' ஓகே.... மதுரையைப் பற்றியும் அவ கிட்டே கொஞ்சம் பேசுங்க !''

அவளோ பஸ் ஸ்டாண்ட் வரை கொண்டு போய்விட்ட சுந்தரேசன் திரும்பி நடந்தான். சீகல் தியேட்டர் முன் நின்று கவனித்தான். ''இஃப் இட்ஸ் டியூஸ்டே, இட் மஸ்ட் பி பெல்ஜியம்'' என்று பெரிய போஸ்டரில் படத்தின் பெயரைப் படித்தான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. பெல்ஜியத்திலிருந்து ஒருத்தி வந்திருக்கிறாள். அதே தினம் அப் பெயரைக் கொண்டு ஒரு திரைப்படமும் வந் திருக்கிறது.

அவன் ஜங்க்ஷனுக்குள் காலை வைக்கவும், 'சுந்தரேசா' என்ற குரல் கேட்டது. பார்த் தான். 'க்யூ' மொட்டை, க்யூவில் நின்று கொண்டிருந்தான்.

'' என்னடா, மொட்டை ?''

'' நீ ரெண்டு ரூபா பாக்கி.''

பலர் முன்னிலையில் மொட்டை தன்னை அவமானப் படுத்துவதாகப்பட்டாலும், தோல் கனமாக இருந்ததால் சுந்தரேசன் பொருட்படுத்தவில்லை.

'' நான் மறக்கலே.''

''கொடுத்துட்டுப் போ.''

''பத்து ரூபாயா இருக்கு.''

''பாக்கி எட்டு ரூபாய் தரேன்.''

''விடமாட்டே போலிருக்கே.''

''மாட்டேன்.''

''அடுத்தாப்லே எங்கே க்யூ?''

''ரேஷன் ஷாப்.''

''பன்னிரண்டு மணி சுமாருக்கு?''

'' ஸ்டேட் பாங்கியிலே பணம் கட்டி சலான் வாங்கணும்.''

'' அங்கே மீட் பண்றேன்.''

''இங்கே ரெண்டு ரூபாயைக் கழட்டிவிட்டு அங்கே மீட் பண்ணு. மாசம் மூணு ஆறது.''

'' இப்ப தர முடியாது.''

''அப்ப, உன்னை உதைச்சு உன் செருப்பைப் பிடுங்கி வைச்சுப்பேன்.''

மொட்டை கத்தினான். சிலர் சிரித் தார்கள். பலர் ஆர்வமாகக் கவனித்தார்கள்.

சுந்தரேசன் கடிகாரத்தைப் பார்த்தான். (ரயில்வே கடிகாரம்தான்) ஏழு அடிக்க ஐந்து நிமிடங்கள். மொட்டை விடாக்கண்டன். கோபம் வந்தால் கன்னாபின்னாவென்று அடிப் பான். மானமோ போயாகிவிட்டது. (இருந்த தாக ஒரு கற்பனை) இனி மூழம் என்ன? சாண் என்ன ?

'' இந்தாடா, உன் பிசாத்து ரெண்டு ரூபாய்.'' — ரூபாயை நீட்டினான்.

''பிசாத்து, கிசாத்துன்னே பல்லை உடைப் பேன். அன்னிக்குக் கெஞ்சற போது எப்படி இருந்தது ?''

பதில் பேசாமல் சுந்தரேசன் ரிடயரிங் ரூமை நோக்கி ஓடினான். அறைக் கதவைத் தட்டினான். கிழவி கதவைத் திறந்தாள்.

''குட்மார்னிங், மேடம்.''

'' ஓ, குட்மார்னிங்... ப்ளீஸ் கம் இன்.... யு ஆர் வெரி பங்க்சுவல்.''

தலைவலி
உடல்வலி
மற்றும்
ஃப்ளூ ஜுரம்

# வலி

இவைகளிலிருந்து
உடனடி நிவாரணம் பெற
ப்ளஸ்ப்ரீன் உபயோகியுங்கள்




ப்ளஸ்ப்ரீன்

ப்ளஸ்ப்ரீன் ஒரு தலைசிறந்த வலி நிவாரணி

ப்ளஸ்ப்ரீன் உபயோகிப்பதால்
வேறு பக்க உபாதைகள் ஏற்படுவதில்லை




இது லா–மெடிக்காவின் ஒரு உன்னத தயாரிப்பு

தமிழ்நாடு & பாண்டிச்சேரி விநியோகஸ்தர்கள்

காசிராம் ஃபார்மா டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்

105 அரண்மனைக்கார தெரு, சென்னை - 600 001. போன்: 25590

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணா விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்- 400 022
டெலிபோன்: 471455
தந்தி: "GROWRICH"    தபால் பெட்டி 6759

வாடிக்கையாளர்களுக்கு எமது புத்தாண்டு வாழ்த்துக்கள்!
எங்கள் புனிதப் பணியில் 31ம் ஆண்டு அடியெடுத்து வைக்கிறோம்

ஏலம் கேட்டபிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட

**1977 ஜனவரி, புதிய குரூப்புகள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | மாதங்கள் | ஏலத் தேதி |
|---|---|---|---|---|
| STB | ரூ. 100/- | ரூ. 2500/- | 25 மாதங்கள் | 9-1-77 |
| STC | ரூ. 50/- | ரூ. 1250/- | 25 மாதங்கள் | 9-1-77 |
| STF | ரூ. 25/- | ரூ. 625/- | 25 மாதங்கள் | 9-1-77 |
| LTM | ரூ. 50/- | ரூ. 2000/- | 40 மாதங்கள் | 9-1-77 |
| LTG | ரூ. 125/- | ரூ. 5000/- | 40 மாதங்கள் | 16-1-77 |
| LTF | ரூ. 250/- | ரூ. 10000/- | 40 மாதங்கள் | 30-1-77 |
| LTE | ரூ. 500/- | ரூ. 20000/- | 40 மாதங்கள் | 30-1-77 |

தலைமை ஆபீஸ் & ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி & கோயமுத்தூர்

இலவசப் பிரகடனத்திற்கு எழுதுங்கள்
சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

வேலை செய்யும் நேரங்கள்:
காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

ஸ்தாபிதம்: 1947

30 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

''ஐ ஆம் ஆல்வேஸ் பங்க்சுவாலிட்டி இன் டைம் !'' என்று சொன்ன சுந்தரேசன் தன்னுடைய ஆங்கிலப் புலமையில் ஒரு கணம் தன்னை இழந்து போனான்.

கிழவி சிரித்தாள்.

'' யூ ஸ்பீக் இங்கிலீஷ் டிஃபரண்ட்லி.''

''தாங்க்யூ மேடம், தாங்க்யூ ! டுடே வீ கோயிங் டு டெம்பிள் அண்ட் கோல்ட் வோடஸ் டாங்க்'' என்ற சுந்தரேசன், ''யூ நோ கோல்ட் வோடஸ் ?'' என்று கேட்டான்.

''வீ ஷால் ஸீ...''

இருவரும் வெளியே வந்தார்கள்.

''வீ வில் வாக்'' என்றாள் பெல்ஜியக்காரி.

அவளுடைய இடது மோதிர விரல் திடீரென அவனைச் சுண்டி இழுத்தது. ஓர் உரித்த வேர்க் கடலை அளவில் வைரம் பளபளத்தது. அதை ஒரு மங்கிய வெள்ளை உலோகத்தில் பதித்திருந்தாள். அய்யங்கார் இந்த மாதிரி வைரத்தை மனத்தில் வைத்துத்தான் கடுக்கனைப் பிரஸ்தாபித்தாரோ ?

''யுவர் ரிங் இஸ் ஒண்டர்ஃபுல்!'' என்றான்.

'' யூ லைக் இட் ?''

''வெரி வெரி மச்லி!'' என்றான் சுந்தரேசன். ''ஐ ஹியர் யுவர் கண்ட்ரி இஸ் வெரி வெரி ஃபேமஸ் ஃபார் டயமண்ட்.''

''யெஸ் !'' என்ற அவள், ''பட் ஐ லைக் யுவர் கண்ட்ரி... ஓ, வாட் ஹியூஜ் டவர்ஸ்!'' என்றாள்.

''ஐ லைக் ரிங்.''

இருவரும் மேற்கு கோபுர வாசல் வழியாகச் சென்றார்கள். வாசலை அடைந்ததும், ''பர்ஸ்ட் ஐ வில் ஷோ யு தி மியூஸிக் பில்லர்ஸ் !'' என்றான் சுந்தரேசன்.

'' வேர் ஆர் தே ?''

''நியர் தி நார்த் வாசல்'' என்ற அவனுக்குத் திடீரென்று, வாசலுக்கு என்ன இங்கிலீஷ் வார்த்தை என்று மறந்து போயிற்று.

''யூ மீன் நார்த் கேட்...''

''யெஸ், யெஸ்... ஐ மீன் கேட், கேட்... யெஸ் கேட் !''

''ஓகே...'' என்று சிரித்து கிழவி, '' ஐ ஃபர்காட் யுவர் நேம் !'' என்றாள்.

'' சுந்தரேசன்.''

''சுந்தர்ஸன்.... ஓ. சுந்தர்ஸன்.... ஈஸ் இட் எஸ் ஓ என் ஆர் எஸ் யு என் ?''

''இட் இஸ் எஸ் ஏ என்.''

'' நாட் பேட்...''

ஆறு லட்சத்து அறுபத்தொன்பதாயிரத்து எண்ணூற்று இருபத்து நாலு சதுர அடி கொண்ட பெரிய கோயிலைச் சுற்றிக் காட்டி விட்டு, அவளுடன் சுந்தரேசன் ஜங்ஷனுக்குத் திரும்பி வந்த போது மணி பத்தரை. கிழவி களைத்துப் போய் விட்டாள்.

அவன் விடைபெற்றுக் கொள்ள எழுந்தான்.

'' தாங்க் யூ சுந்தர்ஸன். ஐ லைக் யு வெரி மச்....''

சொன்னவள் இடது கை விரலிலிருந்து மோதிரத்தை எடுத்தாள்.

திடீரென்று சுந்தரேசன் கண் முன் கிம்பர்லி வைரச் சுரங்கம் தோன்றியது. துஷ்யந்தன் சகுந்தலைக்குக் கொடுத்த வைரம் (மோதிரம்) அங்கிருந்துதான் வந்ததோ ?

ஒரு பத்து ரூபாய் நோட்டுடன் மோதிரத்தை அவனிடம் நீட்டிய போது அவன் பரவசத்தில் தன்னையே இழந்து போனான்.

நாக்கு 'தாங்க்யூ', 'தாங்க்யூ' என்று முணுமுணுத்துக் கொண்டே இருந்தது.

□ □ □

மோதிரத்தைக் கர்ச்சீப்பில் பொதிந்து. மடியில் இறுகக் கட்டிக் கொண்ட அவன் ஒரு மயக்கத்துடன் அய்யங்கார் ஹோட்டலை நோக்கி நடந்தான். தாளப்ப முதலி அக்கிரகாரத்தில் செல்லம்மா தன் பெண்ணுக்கு ஒன்னே கால் காரட்டில் வைரத் தோடு வாங்கினாள். மொத்தம் மூவாயிரத்து எண்ணூறு ரூபாய். அந்தப் பொடிப் பொடி கற்களுக்கே அந்த விலை என்றால், உரித்த வேர்க் கடலை அளவு வைரத்துக்கு என்ன விலை இருக்கும் ?

குறைந்தது எட்டாயிரமாவது இருக்க வேண்டும் !

அவனுக்கும் இப்படி ஓர் அதிர்ஷ்டமா ?

எல்லாம் சொக்கனுடைய அருள் ! அதுவும் பழைய சொக்கனுடைய அருள் !

சுந்தரேசன் சொப்பனம் கண்ட குழந்தை சிரிப்பது போல் சிரித்துக் கொண்டே நடந்தான்.

(தொடரும்)



கணவன் மனைவியிடம் அலுத்துக் கொண்டான்: ''என்னிடமுள்ள கெட்ட பழக்கம், என்னிடம் பணம் இருந்தால் உடனே செலவழித்து விடுகிறேன்; உன்னிடமுள்ள கெட்ட பழக்கம், பணம் இல்லாவிட்டாலும் செலவழிக்கிறாய்.''

-உமன்ஸ் ஓன் - முத்து



சிறுவன் (பிள்ளையார் கோயிலில்): பிள்ளையாரப்பா நான் இந்தப் பரீட்சையில் 'பாஸா'கிவிட்டால் எப்படியாவது 'நூற்றி எட்டு' சதுர் தேங்காய் பொறுக்குகிறேன். நல்லபடியாக பாஸ் ஆக்கிவிடு பிள்ளையாரப்பா!

மயிலை - பரமாத்மா

# பேறுகால விடுமுறை






(மே 1, 1976ல் திருத்தியமைத்தபடி)

1. இச்சட்டத்தின்படி ரூ. 500 வரை மாதச் சம்பளம் வாங்கும் பெண்கள்தான் பயன் பெறலாம் என்றிருந்தது. ஆனால் பின்பு ஈ. எஸ். ஐ. உதவி பெறும் நிறுவனங்களில் வேலை பார்க்கும் ரூ. 1000 மாதச் சம்பளம் பெறும் பெண்களும் பயன் பெறலாம் என்று திருத்தப்பட்டுள்ளது.

2. பெண்கள் தங்கள் பேறுகால விடுமுறையாக மொத்தம் 12 வாரங்கள் பெற்றுக் கொள்ள முடியும். பிரசவத்துக்கு முன் ஆறு வாரங்களும், பிரசவத்துக்குப் பின் ஆறு வாரங்களும் விடுமுறை எடுத்துக்கொள்ள வேண்டும்.

3. எதிர்பார்க்கும் பிரசவ காலத்துக்கு முன் லீவு பெறுவதற்காகத் தன் பேறுகால நிலை பற்றிய அத்தாட்சி ஒன்றையும் பேறுகால விடுமுறையில் செல்ல நினைத்திருக்கும் தேதி பற்றிய அறிவிப்பு ஒன்றையும் சமர்ப்பித்திருக்க வேண்டும்.

4. குழந்தை பிறந்த பிறகு மற்றொரு நோட்டீஸைத் தான் வேலை பார்க்கும் அலுவலகத்துக்கோ, நிறுவனத்துக்கோ அனுப்ப வேண்டும். அதன் பிறகுதான் பேறுகாலத்துக்குப் பின் தேவைப்படும் ஆறு வார கால விடுமுறை அவர்களுக்கு வழங்கப்படும்.

5. நிறுவனம், இந்த நோட்டீஸ் கிடைத்த 48 மணி நேரத்துக்குள்ளாகப் பேறுகால ஊதியம், இதர சலுகைகளை அப்பெண்களுக்கோ, அல்லது அவர்களின் அத்தாட்சி பெற்றவர்களுக்கோ அளிக்க வேண்டும். குழந்தை பிறந்து, நோட்டீஸ் அனுப்ப மறந்துவிட்டாலும் கூட, மேலே குறிப்பிட்ட ஊதியம் மற்றச் சலுகைகளை நிறுவனம் அவர்களுக்கு மறுக்கக்கூடாது.

6. பேறுகால மருத்துவ போனஸாக ரூ. 25 பெறுவதற்கு அப்பெண்களுக்கு உரிமையுண்டு.

7. ஒரு பெண், குழந்தை பெற்றாள் என்று தெரிந்திருந்தும் ஆறு வாரங்களுக்குள்ளாக அவளை மீண்டும் வேலை செய்ய அனுமதித்தால், அது சட்டப்படி குற்றமாகும்.

8. பேறுகாலத்தில் நோய்வாய்ப்பட்டாலோ, அபார்ஷன் ஏற்பட்டாலோ, அது

## ஓடாத ரயிலில் ஒரு நாள்!

கல்கத்தாவிலிருந்து ஹௌரா மெயில் புறப்பட இன்னும் சிறிது நேரம்தான் இருந்தது. ஆயிரத்தெட்டாவது முறையாகக் ''குழந்தை ஜாக்கிரதை மைதிலி! பால் பவுடர் போதுமோ? போனவுடன் கடிதாக போடம்மா'' என்று சொல்லிக் கொண்டிருந்தார் என் மாமியார்.

'அப்பாவுக்கு டாடா சொல்லடா கண்ணு' என்றேன். அவர் கண்கள் இலேசாகக் கலங்கின. ஐந்து மாதக் குழந்தையைப் பிரிவதில் துக்கம். ரயில் நகரத் தொடங்கியது.

இரண்டாம் நாள் இலேசாக மழை தூறிக் கொண்டிருந்தது. குளிர்ந்த காற்று குழந்தைக்கு ஒத்துக்கொள்ளவில்லை. படுத்த ஆரம்பித்தான். ''இன்னும் கொஞ்ச நேரம் தானே? வீடு போய்ச் சேர்ந்து விட்டால் சரியாகிவிடும்'' என்று நான் சமாதானப் படுத்திக் கொண்டேன்.

சென்னையை அடையச் சுமார் நூறு மைல் இருந்தபோது ரயில் ஒரு சின்ன ஸ்டேஷனில் நின்றுவிட்டது.

''சென்னையில் நல்ல மழை; ரயில் இன்னும் இரண்டு நாட்களுக்குக் கிளம்பாது'', என்ற அறிவிப்பு வந்தபோது எனக்கு ஏறக்குறைய மூச்சே நின்று விட்டது. இரவு மெழுகு வர்த்தியின் சன்னமான வெளிச்சத்தில் நாங்கள் பீதியுடன் அமர்ந்திருந்தோம்.

சம்பந்தமான டாக்டர் சர்டிபிகேட் சமர்ப்பிக்கப்பட்டால், அப்பெண் வேலை பார்க்கும் நிறுவனம் அப்பெண்ணுக்கு மேலும் ஒரு மாதம் வரையில் விடுமுறை கொடுத்து, ஊதியமும் அளிக்க வேண்டும்.

9. பேறுகால சமயத்தில் தான் வேலை பார்க்கும் நிறுவனத்தினரை எளிதாகச் செய்யக்கூடிய வேலைகளைத் தனக்கு ஒதுக்கும்படி ஒரு பெண் கேட்டுக் கொள்ளலாம். எளிய கஷ்டமில்லாத வேலை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்ற காரணத்துக்காக அந்த நிறுவனம் அப்பெண்ணுக்கு ஊதியக் குறைப்புச் செய்ய முடியாது.

10. குழந்தைக்குப் பதினைந்து மாதங்கள் ஆகும்வரை ஒரு நாளில் பால் கொடுப்பதற்கு இரண்டு இடைவேளைகளைக் கேட்கப் பெண்ணுக்கு உரிமை உண்டு.

11. பேறுகாலத்தில் ஒரு பெண் எதிர் பார்த்த தேதிக்கு முன்னதாகவே குழந்தை பிறந்தாலோ, கருச் சிதைவு போன்ற அசம்பாவிதங்கள் ஏற்பட்டாலோ, முன்னறிவிப்பு இன்றி அலுவலகம் வராமல் இருக்கலாம். அப்படி வராமல் இருக்கும் காரணத்துக்காக அப்பெண்ணை வேலையிலிருந்து நீக்க முடியாது.



பம்பாயிலுள்ள எஸ்.என். டி.டி. பல்கலைக் கழகம் பெண்களுக்காக, பெண்களாலேயே நடத்தப்படுகிறது. இதன் ரிஜிஸ்தரார், வைஸ் சான்ஸலர் எல்லோருமே பெண்கள்தாம். இதில் இப்போது 22000 பெண்கள் கல்வி கற்கிறார்கள். பெண்களுக்காக நடத்தப்படும் பல்கலைக் கழகம் நம் நாட்டிலேயே இது ஒன்றுதான்.

''ஸரோ''

12. குழந்தை பிறந்து பேறுகால விடுமுறையில் இருக்கும்பொழுது ஒரு பெண் இறந்துவிட்டால், அவளுக்குச் சேர வேண்டிய ஊதியம், மற்றும் சலுகைகளை அவளால் அத்தாட்சி பெற்றவருக்கோ, அல்லது சட்டப்படி அவளின் வாரிசுதாரருக்கோ அந்த நிறுவனம் அளித்தாக வேண்டும்.

13. பேறுகாலத்தில் குழந்தை பிறக்கு முன்பே ஒரு பெண் இறந்து விட்டால், அவள் இறந்த நாள் வரையில் அவளுக்கு ஊதியம் கணக்கிட்டு அவள் அத்தாட்சி பெற்றவருக்கு அளிக்க வேண்டும்.

14. மேலே கண்ட விதிமுறைகளுக்குப் புறம்பாக ஒரு நிறுவனம் செயல்பட்டால் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட கண்காணிப்பாளருக்கு மனுச் செய்து கொள்ளப் பெண்களுக்கு உரிமை உண்டு.

15. பேறுகால விடுமுறையில் சென்ற ஒரு பெண் வேறு ஒரு நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்தால், அவளுக்குப் பேறுகால விடுமுறைச் சலுகைகளை ரத்துச் செய்துவிடலாம். சாதாரண விடுமுறையில் இருப்பதாகக் கணக்கிடலாம்.

16. பேறுகால சமயத்தில் ஒரு பெண்ணின் நடத்தையில் குற்றங்கள் கண்டுபிடிக்கப்பட்டால் வேலையிலிருந்து நீக்க நிறுவனத்துக்கு உரிமை உண்டு.

—லலிதா நாராயணன்

---

குழந்தை கையில் நிற்காமல் அழுதான். பால் பவுடர் தீர்ந்து விட்டது. எனக்கோ தாய்ப்பாலும் இல்லை. குழந்தையைத் தேற்ற முடியாமல் திணறினேன். பெட்டியில் இருந்தவர்கள் புரியாத பாஷையில் ஆளுக்கு ஒரு யோசனை சொன்னார்கள். அழுது அழுது களைத்துப் போய், வயிறு ஒட்டி உறங்கும் குழந்தையைப் பார்க்கப் பார்க்க எனக்கு வருத்தம் மேலோங்கியது.

ரயில் கிளம்ப வேண்டும் என்று நான் வேண்டாத தெய்வம் இல்லை. மறு நாள் காலை கிராமத்து மக்கள் எங்களை வேடிக்கை பார்க்க வந்தார்கள். கிராமத்துப் பெண்கள் சிலர் வருத்தமாய் அமர்ந்திருந்த என்னைக் காட்டி, தெலுங்கில் என்னவோ விசாரித்தார்கள். தெலுங்கு அறிந்த என் பக்கத்து ஸீட் பெண் அவர்களுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். ஒருத்தி கைக்குழந்தையுடன் வந்திருந்தாள். ஆரோக்கியமாகத் துள்ளி விளையாடும் குழந்தையைப் பார்த்த போது என்னை அறியாமல் கண்ணீர் பெருக்கெடுத்தது. ''உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால் குழந்தைக்குப் பால் கொடுப்பதாக அந்தப் பெண் சொல்கிறாள்'' என்று எனக்குப் பக்கத்தில் இருந்த பெண் மொழி பெயர்த்துச் சொன்னாள்.

நான் பேசாமல் குழந்தையை எடுத்து நீட்டினேன். அவள் அங்கேயே கீழே உட்கார்ந்து பாலூட்டினாள். அவள் குழந்தை சற்றுப் பெரிதாகையால் சின்னக் குழந்தையை ஆசையுடன் தொட்டுப் பார்த்து 'பாப்பா' என்று கொஞ்சி விளையாடியது. குழந்தையை அவள் திருப்பிக் கொடுத்துவிட்டுச் சற்றுக் கழித்து மறுபடியும் வருவதாகச் சொன்ன போது நான் நன்றிகூடச் சொல்லத் தெரியாமல் வியப்புடன் அவளையே பார்த்துக் கொண்டு நின்றேன்.

மறுநாள் ஒரு வழியாக ரயில் கிளம்பிய போது நான் மகிழ்ச்சியுடன் நன்றி கூறினேன். அவள் புன்னகையுடன் சர்வ சாதாரணமாய்த் தன் கைக் குழந்தையுடன் கிராமத்தை நோக்கித் திரும்பி நடக்க ஆரம்பித்தாள். நான் பனித்த கண்களுடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

—எஸ். ரத்னமாலா



பரபரப்பூட்டும்

## நம்பகமான மூன்று புதிய பாலிஸிகளைப் பற்றி அறிந்து கொள்ள உங்கள் எல்.ஐ.சி. முகவரைக் கண்டீர்களா?



### 'குறித்த காலத்தில் பணம் பெறும் பாலிஸி'

மற்ற திட்டங்களை விட விரைவாகவும், அதிக மாகவும், பாலிஸி முதிர்ச்சி அடைவதற்கு முன்பே இடை இடையே குறித்த காலங்களில் பணத்தைத் திரும்பப் பெறலாம்.

தவிர, முழு ஆயுள் பாது காப்பும் கிடைக்கிறது.

### 'பணம் மற்றும் பாதுகாப்பு பாலிஸி'

5 ஆண்டுகளுக்கு ஒரு முறை தவணைத் தொகைகள் நிச்சயமாகக் கிடைப்பதுடன், முழுக் காப்புத் தொகையின் மீதும் போனஸ் கிடைக்கிறது. இத்துடன் உங்கள் ஆயுள் முழுவதும் பாதுகாப்பு கிடைக்கிறது.

### 'வளரும் பாதுகாப்புப் பாலிஸி'

புதுப் பிரேரணையோ மருத்துவப் பரிசோதனையோ இன்றி, உங்கள் பாலிஸியின் மதிப்பு குறிப்பிட்ட காலங் களில் கூடிக் கொண்டே போகிறது.

மாறிவரும் காலங்களுக்கும்...
மாறிவரும் தேவைகளுக்கும்.



லைப் இன்ஷ்யூரன்ஸ்
கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

daCunha/LIC/39 TAM

# கவாஸ்கர் கதை

இருபத்தியொரு வயதுதான் ஆயிற்று. அதற்குள் சுயசரிதை எழுத ஆரம்பித்து விட்டார் கவாஸ்கர்!

''ஸன்னி டேஸ்'' என்பது நூலின் பெயர். கிரிக்கெட் ஆடி மகிழ்ந்த நாட்களைத் தலைப்பு குறிக்கும். அதோடு, கவாஸ்கரை அவரது நண்பர்கள் 'ஸன்னி' என்றுதான் அழைப்பார்கள் என்பதும் ஒரு காரணம்.

மேற்கிந்தியத் தீவுகளில் 1971-ல் கவாஸ்கர் நிகழ்த்திய சாதனையை இன்று வரை வேறு எந்த இந்திய பேட்ஸ்மெனும் வென்றதில்லை. மேற்கிந்தியத் தீவுக்கெதிராக இந்தியா அடைந்த முதல் வெற்றிக்கு கவாஸ்கரின் ஆற்றலே முக்கிய காரணமாயிற்று.

கிரிக்கெட்டில் வெற்றி பெற அதிர்ஷ்டம் வேண்டும் என்பார்கள். கவாஸ்கரைப் பெறக் கிரிக்கெட் உலகமும் அதிர்ஷ்டம் பண்ணியிருந்தது. இவர் பிறந்த போது இடதுபுறக்



காதின் மேற்பகுதியில் ஒரு சிறு துவாரம் இருப்பதை இவர் மாமா கவனித்தார். மறுநாள் அவர் ஆஸ்பத்திரிக்கு வந்தபோது தம் சகோதரியின் அருகில் தூங்கும் குழந்தையின் காதில் துவாரம் இல்லை என்பதைப் பார்த்தார். குழந்தை மாறிப் போயிருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு கூச்சல் போட்டார். பரபரப்புடன் தேடியதில் காதில் ஓட்டை உடைய குழந்தை ஒரு மீனவப் பெண்மணியின் அருகில் அமைதியாக உறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். கிரிக்கெட் உலகம் செய்த அதிர்ஷ்டம் குழந்தை கவாஸ்கர் பெற்ற தாயிடம் திரும்பினான்!

கவாஸ்கர் தமது முதல் அயல்நாட்டுப் பயணத்தின் போது இடது கை நடுவிரலில் நகச்சுத்தியுடன்தான் புறப்பட்டார். அதை நியூயார்க்கில் ஆபரேஷன் செய்து குணப்படுத்தும்படியாயிற்று. இதனால் மேற்கிந்தியத் தீவுகளுக்கு எதிராக முதல் இரண்டு டெஸ்ட்டுகளில் இவர் கலந்து கொள்ள முடியாமல் போயிற்று. அதன் பின்னர் நடந்த டெஸ்ட்களில் பிரமாதப்படுத்தினார். போர்ட் ஆஃப் ஸ்பெயினில் கடைசி டெஸ்ட்டின் போது ஆறு நாட்களும் இவருக்குத் தாள முடியாத பல் வலி! அப்படியும் வேறு எந்த இந்திய டெஸ்ட் வீரரும் சாதிக்காததை நிறைவேற்றினார். ஒரே டெஸ்ட்டில் ஒரு செஞ்சுரியும் இரட்டை செஞ்சுரியும் போட்டார். இந்த அற்புதத்தைச் சாதித்தவர் கவாஸ்கர் தவிர கிரிக்கெட் சரித்திரத்திலேயே வேறு ஒருவர்தாம் உண்டு!

''உடம்பில் ஏதாவது வேதனை இருந்தால் அது என் ரோஷத்தைக் கிளப்பி முதுகை நிமிர்த்துகிறது. அதனால் வழக்கத்தை விடச் சிறப்பாக ஆடுகிறேன்'' என்கிறார் கவாஸ்கர். ''என் வெற்றிகளுக்குக் காரணம் மனத்தை ஒருமுகப்படுத்தும் ஆற்றல்தான்!''

இங்கிலாந்துக்கு எதிராக இந்தியா இங்கிலாந்திலேயே ஆடிப் பெற்ற முதல் வெற்றியும் 1971-ல்தான். சரித்திரத்தில் இடம் பெறும் இந்த ஓவல் டெஸ்ட்டில் கவாஸ்கர் எடுத்த எண்ணிக்கையும் ஓவல்தான்! (பூஜ்யம்.) அது மட்டுமல்ல, அன்று தமக்கு அவுட் கொடுத்த அம்பயரின் தீர்ப்புத் தப்பு என்று வேறு இந்த நூலில் எழுதியுள்ளார்.

''அடடா! இங்கிலாந்து அம்பயர்கள் உலகத்திலேயே சிறந்தவர்களாயிற்றே? அவர்கள் தீர்ப்பைச் சந்தேகிக்கலாமா என்ன!'' என்று கிண்டல் வேறு பண்ணுகிறார். இது கிரிக்கெட் பண்பாகத் தோன்றவில்லை.

இதற்கு முன்பு நடந்த லார்ட்ஸ் டெஸ்ட்டில் வேகப் பந்து வீச்சாளர் ஜான் ஸ்னோவுடன்




'மோதி'னார். இதன் விளைவாக அடுத்த டெஸ்ட்டில் ஸ்னோ சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஒழுங்கு நடவடிக்கை! இதே ஸ்னோதான் ஓவல் டெஸ்ட்டில் கவாஸ்கரைப் பூஜ்யத்துக்கு எல். பி. டபிள்யூ. ஆக்கியவர்!

1976 ஆரம்பத்தில் நியூஜிலாந்து சுற்றுப் பயணத்தின் போது அந்நாட்டு அம்பயர்கள் நியூஜிலாந்து ஆட்டக்காரர்களுக்குச் சாதகமாகவே அடிக்கடி தீர்ப்பளித்ததாக கவாஸ்கர் ஒளிவு மறைவின்றி மனக்கசப்புடன் எழுதுகிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் சந்திரசேகர் அம்பயரைக் கிண்டல் செய்ததை விவரிக்கிறார்:

ஆக்லண்டில் நடந்த முதல் டெஸ்ட்டின் போது சந்திரசேகரின் பந்தில் வாட்ஸ்வொர்த் காத்த விக்கெட் வீழ்ந்தது. சந்திரசேகர், 'அப்பீல்' செய்தார். அம்பயர், 'ஹி இஸ் போல்ட்' என்றார். உடனே சந்திரசேகர், ''அவர் கிளீன் போல்ட் என்பது எனக்குத் தெரியும்; அவர் அவுட்டா என்றுதான் கேட்கிறேன்'' என்றார்!

நியூஸிலாந்து பத்திரிகைகளையும் கவாஸ்கர் விட்டு வைக்கவில்லை. அவர்கள் நியூஸிலாந்து ஆட்டக்காரர்களுக்குச் சாதகமாகவே திரித்து எழுதி வந்ததைச் சாடுகிறார்.

மேற்கிந்தியத் தீவுகளில் கிரிக்கெட் காண வரும் முரடர் கூட்டத்தைக் கண்டிக்கும் சுனில், நம் நாட்டவரையும் விட்டு வைக்கவில்லை. லண்டனில் வாழும் இந்தியப் பத்திரிகையாளர்களை விளாசுகிறார். அன்றைய இந்திய ஹைகமிஷனரை வாங்கு வாங்கென்று வாங்குகிறார். உலகக் கோப்பைப் பந்தயத்தில் ''ஏன் நிதானமாக ஆடினாய்?'' என்று கவாஸ்கரைக் காரணம் கேட்ட அன்றைய கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டின் தலைவரை உலுக்கி எடுக்கிறார்.

மொத்தத்தில் கிரிக்கெட் உலகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ள நூல் இது.

(ஆதாரம்: ஹிந்துஸ்தான் டைம்ஸில் வெளியான விமர்சனம்.)

விலாசம்: ரூபா அண்டு கம்பெனி, 102, பிரசாத் சேம்பர்ஸ், ஆபரா ஹவுஸ், பம்பாய்-400004; விலை: ரூ. 30-

---

# கிரிக்கெட் புதிர்!

⌘ ஒரு பந்து தான் வீசப்பட்டது. 5 பேர் அவுட் ஆக முடியுமா? எவ்வாறு?

இதோ விடை:

ஆட்டம் மொத்தம் 2 நாட்கள். முதல் நாள் மாலை பாட்டிங் செய்த டீம் 5 விக்கெட்டுகளை இழந்திருந்தது. மறுநாள் ஆட்டம் ஆரம்பித்தது. Batting செய்ய வேண்டியவரில் ஒருவர், குறிப்பிட்ட நேரத்திற்கு வர இயலவில்லை. எனவே, ஒரு பந்து போடு முன்னரே, ஒருவர் அவுட் ஆக்கப்பட்டார்!

வேறு ஒருவர் மட்டை அடிக்க இறங்க, முதல் பந்து, No ball என்று அம்பயர் அறிவிக்க, அதை ஓங்கி அடித்து, ஓட்டம் எடுக்க முயன்று இரண்டாவது ஆட்டக்காரர் அவுட்.

அடுத்த பந்து போடுவதற்கு முன், பந்து வீசும் முனையிலுள்ள ஆட்டக்காரர் Crease ஐ விட்டு வெளியே வந்து 'ரன் அவுட்' செய்யப்பட்டார். இன்னும் ஒரு பந்து போட்டு முடியவில்லை. 3 பேர் அவுட்.

இப்போதுதான் நிஜமாகவே ஒரு பந்து போட்டார் அந்த பௌலர். அதை பாட் செய்தவர் ஓங்கி அடிக்க அது, இந்தப் பக்கம் இருக்கும் பாட்ஸ்மென்னின் மேல் பட்டு அவரை மயக்கத்தில் ஆழ்த்தியது. அவர் மேல் விழுந்த பந்தை, ஒருவர் 'காட்ச்' பிடிக்க 4-வது பாட்ஸ்மென் அவுட். அடிபட்டவர் மயங்கி விழுந்ததால் ஆட முடியாத நிலையில் அவுட் ஆகி விட்டார். ஆகவே ஐந்து பேரும் ஒரே பாலில் அவுட். இது உண்மையில் 1972-ல் நடந்தது.

⌘ கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் நம்பிக்கைகளும், செயல்களும் விநோதமானவை. உதாரணத்திற்குச் சில. 1. இப்போது, நம் நாட்டில் ஆடிக் கொண்டிருக்கும், எம்.ஸி.ஸி. கோஷ்டியின் மானேஜரான கென் பாரிங்டன், தாம் 'பாட்' செய்யும் நாளன்று காலையில் எழும்போது, படுக்கையிலிருந்து வலது கைப்பக்கம் கால் வைத்து, எழுவார். அது மட்டுமல்ல. மைதானத்திற்குச் சென்றதும், எல்லாமே இடதுகைப் பக்கம்தான் ஆரம்பிப்பார். ஷூ, காலுக்குப் பாட் (Pad) எல்லாமே முதலில் இடது காலில்தான் ஆரம்பிப்பார்.



2. விக்கெட் கீப்பர் அலான் நாட், பாட் செய்யத் தொடங்குமுன், ஸ்டம்புகளின் மேலுள்ள பெயில்ஸை தொட்டு விட்டுத்தான் ஆடுவார்.

3. நம் ஆட்டக்காரரான சுனில் கவாஸ்கர், பாட்டிங் செய்ய இறங்குமுன், மற்ற ஆட்டக்காரரின் வலப்பக்கம்தான் எப்போதும் வருகிறார்.

4. குண்டப்பா விஸ்வநாத், தங்கும் அறையில் நுழைந்ததும் வலதுபக்கம் இருக்கும் கட்டிலில் தான் படுப்பார்.

5. எம். எல். ஜெயசிம்மா ஆடும்முன், இடது கையிலுள்ள கையுறையை ஒரு தடவை உதட்டால் தொட்டு, கடிப்பார். பின் 'பாட்' (Bat) வாங்கித்தான் ஆடுவார்.

6. எம்.ஸி. கௌத்ரே, ஆட்டம் தொடங்குமுன் சற்று நேரம் வரை, தனியாக ஓர் அறையில் முக்கால் நிர்வாணமாகவே இருப்பாராம். பிறகுதான் பாண்ட், சொக்காய் முதலியவைகளை அணிவார்.

7. கான்ஹாய், 'ஸோபர்ஸ்' என்று கையெழுத்து இட்ட மட்டையைத்தான் உபயோகிப்பார்.

— திரட்டியது: வி. மகாலிங்கம்

# அவன் பார்த்துப்பான்

கோமல் சுவாமிநாதன்

## காட்சி 7 (தொடர்ச்சி)

சர்மா: நாயுடுகாரு! நீங்க கல்யாணியைக் கூட்டிக்கிட்டு மாடிக்குப் போங்க. கல்யாணி! இந்த விஷயம் எங்க மூணு பேரைத் தவிர வேறு யாருக்கும் தெரிய வேண்டாம்.

(கல்யாணியை அழைத்துக் கொண்டு ஏழுமலை நாயுடு போகிறார். சிவராமன் யோசனையுடன் அமருகிறான்.)

சர்மா: நான் அவன் பார்த்துப்பான்னேன்... நீ, நான் பார்த்துடறேன்னே. இப்ப அவன் எப்படிப் பார்க்கிறான், பார்த்தியா? உன்னுடைய முதலாளி சொக்கலிங்கத்துக்கு எதிராகவே போர் தொடுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கு, பார்த்தியா? என்ன பண்ணப் போறே?

சிவரா: அதுதான் எனக்குப் புரியல்லே! இந்த விஷயத்தை நான் தலைமேல எடுத்துப் போட்டுக்கிட்டு முழு மூச்சாக இறங்கினால் சொக்கலிங்கம், பிரசாத் இரண்டு பேர்களுடைய எதிர்ப்புக்கும் ஆளாகும்படி இருக்கும்.

சர்மா: அதாவது ஒரு பந்தம் வந்து குறுக்கிடறது. இல்லையா? நம்ப முதலாளியாச்சே, அவர் புள்ளையாச்சே, தமிழ்நாட்டு மக்களுக்கு நம்மை ஓரளவுக்குத் தெரிய வச்சவராச்சே. அவர் உப்புல வாழ்ந்தோமே, அவருக்குத் துரோகம் நினைக்கலாமா? இப்படியெல்லாம் உன் மனசுல படமா ஓடறது இல்லையா?

சிவரா: ஆமாம், சர்மாஜி! சொக்கலிங்கத்துக்கு நான் நன்றிக் கடன்படல்லியா? இந்த விஷயத்தை நான் பெரிதுபடுத்தினா அவர் குடும்ப மானம் வீதிக்கு வருமேங்கிற குழப்பம்தான்.

சர்மா: கிட்டத்தட்ட ஒரு குருக்ஷேத்திரக் குழப்பம். வேண்டியவர்களெல்லாம் ஒரு பக்கம்; கடமை ஒரு பக்கம். கீதையிலே பெரிசா என்ன சொல்லியிருக்குன்னு எழுதிவியே, அது ஏன்? இந்த மாதிரி நிலைமையிலே என்ன முடிவு எடுக்கணும்னு அன்னிக்கே கீதை வழிகாட்டிடுத்து, சிவராமா!

சிவ: அவசரப்படாதீங்க. ஒரு பக்கத்தைக் கேட்டோம். மறு பக்கத்தையும் கேட்க வேண்டாமா...?

சர்மா: தாராளமாகக் கேளு.

(சிவராமன் டயல் செய்கிறான். மறு பக்கம் பிரசாத்தின் குரல் ஒலிக்கிறது.)

பிரசாத்: ஹலோ! பிரசாத் ஹியர்.

சிவரா: பிரசாத்! நான் சிவராமன் பேசறேன்.

பிரசாத்: குட்மார்னிங் சார்.



''இன்னிக்கு ஒரு புதும் பழக்கம்! நீ அந்த விருந்துல கண்டிப்பா கலந்துக்கணும்.''

சிவரா: குட்மார்னிங். இன்னிக்கு என் பிறந்த நாள்.

பிரசாத்: அப்படியா! என் இதயம் நிறைந்த வாழ்த்துக்கள்!

சிவரா: நன்றி. இன்னிக்கு இரவு என் வீட்டுல ஒரு விருந்து கொடுக்கப் போறேன்.

பிரசாத்: விருந்தா? வேடிக்கையா இருக்கே! இந்தப் பழக்கம் எல்லாம்' உங்களுக்கு இல்லேயே?

சிவரா: இன்னிக்கு ஒரு புதுப் பழக்கம்! நீ அந்த விருந்துல கண்டிப்பா கலந்துக்கணும்.



"சிவராமன் வெளியே போயிருக்கிறார்; இதோ வந்து விடுவார்!"

பிரசா: ஓ. கே. வேற யார் வராங்க?

சிவரா: உன்னைத் தவிர இன்னும் இரண்டு பேர்.

பிரசா: யாரது?

சிவரா: உன்னுடைய பெஸ்ட் பிரண்ட்ஸ் இரண்டு பேரை நீயே அழைத்து வரலாம்.

பிரசா: ஓ!; எனக்கு நூற்றுக்கணக்கான பிரண்ட்ஸ் இருக்காங்க. நான் எப்படி சார் இரண்டு பேரை மட்டும் அழைத்து வரது?

சிவரா: நூற்றுக்கணக்கான பேர் இருந்தாலும் எல்லாருமே 'பெஸ்ட் பிரண்ட்ஸ்' ஆயிட முடியாது! உன் எல்லா நண்பர்களுக்கும் விருந்து' கொடுப்பதென்றால், அதற்குத் திராணி எனக்கு வேண்டாமா?

பிரசாத்: சரி, சார்! பொறுக்கி எடுத்த இரண்டு பேரோடு வருகிறேன்.

(சிவராமன் போனை வைக்கிறான்.)

## காட்சி 8

(ஏழுமலை நாயுடு வீடு. இரவு எட்டு மணி. விளக்குகள் எரிகின்றன. பிரசாத், நீலகண்டன், காளமேகம் மூவரும் வருகிறார்கள். கல்யாணி அரிவாளால் தேங்காய் உரித்துக் கொண்டிருக்கிறாள்.)

பிரசாத்: மிஸ்டர், சிவராமன், மிஸ்டர் சிவராமன். (பதில் இல்லே) என்னடா இது. யாரையும் காணோம்!

நீல: சிவராமன் உன்னே விருந்துக்குக் கூப்பிட்டாரா, இல்லே ஏதாவது கனவு கண்டியா?

பிரசாத்: போடா ஃபூல்! மிஸ்டர் சிவராமன்.

சர்மா (உள்ளேயிருந்து வந்தவண்ணம்): வாருங்கள், வாருங்கள்! சிவராமன் கொஞ்

"கல்யாணி! இந்த வேலையெல்லாம் ஆம்பிள்ளைகள் செய்யற வேலை அம்மா!"



சம் வெளியே போயிருக்கிறார். இதோ வந்து விடுவார். நீங்க வந்தா உட்காரச் சொன்னார்.

பிரசாத்: இவங்க யாரு?

சர்மா: எல்லாம் நமக்குத்தெரிஞ்ச பொண்ணு தான்... ஏழுமலை நாயுடு பொண்ணு. ....கல்யாணி! இந்த வேலையெல்லாம் ஆம்பளைகள் செய்யற வேலை அம்மா! உனக்கு எதற்கு அவசரம்? நீ அவசரப் பட்டீன்னு உனக்குத்தான் ஆபத்து நேரும். கொஞ்சம் லேட்டானாலும் பரவாயில்லை. வந்தவா இருந்து விருந்து சாப்பிட்டுட்டுப் போவா.. அரிவாளை உள்ளே கொண்டு வைச்சுட்டு 'சூப்' கொண்டு வாம்மா...

(கல்யாணி போகிறாள். உள்ளே யிருந்து ரங்கநாயகி வருகிறாள்.)

ரங்க: அப்பா, வாங்கப்பா, நல்லா இருக்கிங் களா?

நீல: எங்களை உங்களுக்குத் தெரியுமா?

ரங்க: ஏன் தெரியாது? சிவராமப்பா தான் நீங்க விருந்துக்கு வரப்போறதாச் சொல் லிச்சே!

நீல: நீங்க என்ன, சிவராமனுக்கு உறவா?

ரங்க: தூரத்து உறவு. திருவண்ணாமலைக்குப் பக்கத்தில் செங்கத்துல இருக்கோம். எங்க பொண்ணை மெட்ராசிலே கட்டிக் கொடுக்க வந்திருக்கோம்.

பிரசாத்: உங்க பொண்ணை யாருக்குக் கட்டிக் கொடுக்கப் போறீங்க?

ஏழுமலை (வந்தவண்ணம்): இந்த வீட்டுக்கு நீங்க வந்திருக்கீங்க. யாரு மாப்பிள்ளே? நீங்களே சொல்லுங்க, பார்க்கலாம்.

பிரசாத்: சிவராமனுக்கா?

ரங்க: அதுதான் கல்யாணமே வேண்டாம்னு முடிவு பண்ணிடுச்சே. அதுன் தம்பி இல்லே, நித்யானந்தம், அதுக்குத்தான் நிச்சயம் பண்ணலாம்னு....

சர்மா: (நாயுடுவைப் பார்த்து) நாயுடு... உங்க பொண்ணு உள்ளே தனியா வேலை செய்துகிட்டிருக்குது. போய் ஒத்தாசை பண்ணுங்க.

ஏழுமலை: வா, லெட்சுமி, வா.

(ஏழுமலையும் ரங்கநாயகியும் உள்ளே போகிறார்கள்.)

சர்மா: அவுங்க ரெண்டு பேரும் பழங்கால மனிதர்கள் — பேசிக்கிட்டே இருப்பாங்க. உங்களுக்குக் கஷ்டமா இருக்குமேன்னு தான் உள்ளே அனுப்பினேன்.

காள: ரொம்ப நல்ல வேலை செய்தீங்க!

பிரசாத்: இவங்க பொண்ணை நித்யானந்தத் துக்குக் கட்டிக் கொடுக்கப் போறாங்களா?

சர்மா: ஆமா. இன்னிக்குச் சிவராமனுக்குப் பிறந்த நாள். அதோட நிச்சயதார்த்தமும் சேர்ந்திருக்கு.

(கல்யாணி மூன்று டம்ளர் சூப்புடன் வருகிறாள். விருந்தினர் எடுத்துக் கொண்டதும், ஏழுமலை நாயுடு சர்மாவை உள்ளிருந்து கூப்பிடவே சர்மாவோடு அவளும் போகிறாள்.)

நீலகண்: பிரசாத், தெரியுதா?

பிரசாத்: நந்தி ஹில்கல...

காள: நம்மை அவ அடையாளம் தெரிஞ்சுக் கலேனு நினைக்கிறேன்!

''எழுபத்திரண்டு மணி நேரம் டயம் தரேன். அதுக்குள்ளே நீங்க போலீசிலே....''



நீல: சிவராமனுடைய தம்பிக்கு இந்தப் பொண்ணைக் கட்டிக் கொடுக்கப் போறாங்களாமே!

பிரசாத்: அதனால் நமக்கென்ன?

நீல: சிவராமன் நம்முடைய நண்பர் ஆச்சே! அவருகிட்ட இந்தப் பொண்ணு வேண்டாம்னு சொல்லிட்டா....

பிரசாத்: மூளை இருக்கா? ஏன் வேண்டாம்னு அவர் கேட்டா?

காள: அதானே! எங்கப்பன் குதிருக்குள்ளே இல்லேங்கிற மாதிரி நாங்க மூணு பேரும் அந்தப் பெண்ணைக் கெடுத்துட்டோம். அதனாலே வேண்டாம்னு சொல்லணும்ங்கிறியா?

நீல: அப்படிப் பச்சையாச் சொல்ல வேண்டாம்! அந்தப் பெண் நடத்தை கெட்டவங்கற மாதிரி ஒரு கோடி காட்டிட்டா.

பிரசாத்: மூடு வாயை. அவள் எவனுக்காவது மனைவியாயிட்டுப் போறா, நமக்கென்ன?

காள: நல்ல வேளை! அந்தப் பொண்ணு நம்பளை அடையாளம் கண்டுக்கல்லே.

(காளமேகம் சூப்பை எடுத்துச் சாப்பிடப் போகிறான்)

நீல: ஒரு வேளை நம்மை அடையாளம் தெரிஞ்சு சூப்புல விஷத்தைக் கலந்திருந்தால்....

(சிவராமன் ஓர் அறையிலிருந்து வெளியே வருகிறான். அதே சூப்பை எடுத்துக் குடிக்கிறான்.)

பிரசாத்: நீங்க ....

சிவ: நீங்க பேசினதெல்லாம் கேட்டேன். ஆக நீங்க மூணு பேருமாச் சேர்ந்து அந்தப் பொண்ணை 'ரேப்' பண்ணியிருக்கீங்க.

பிரசாத்: ஆமாம். அதுக்கு இப்ப என்ன பண்ணப் போறீங்க?

(கல்யாணி அரிவாள்மணையுடன் ஓடி வருகிறாள்.)

கல்யாணி: சண்டாளப் பாவிங்களா. நீங்க நல்லா இருப்பீங்களா?

(அரிவாள்மணையை ஓங்குகிறாள்)..

சிவ: கல்யாணி! என்ன இது...?

(சிவராமன் இடைமறித்துத் தடுக்கிறான்.)

கல்யாணி: சார் என்னை விடுங்க, சார். இவங்களைக் கண்டதுண்டமா வெட்டிப் போட்டாத்தான் என் ஆத்திரம் தீரும்.

(ரங்கநாயகி, ஏழுமலை நாயுடு, சர்மா மூவரும் உள்ளேயிருந்து வருகிறார்கள்.)

ஏழு: கல்யாணி நீ அவுங்க கிட்டே போகாதே! இந்த அரக்கன்களை நானே அடிச்சுக் கொல்றேன்.

ரங்க: யப்பா, யப்பா வேணும்பா. நமக்கு அந்தப் பாவம் வேணும். ஆண்டவன் கிட்ட விட்டுடு. அவன் இவன்களை அதம் பண்ணிடுவான்.

சிவ: நீங்கள்ளாம் சும்மா இருக்க மாட்டீங்க?

பிரசாத்: நாடகம் முடிஞ்சுதா, மிஸ்டர் சிவராமன்! உங்க விருந்துக்கு ரொம்ப நன்றி, நாங்க வர்றோம்.

சிவ: நில்லுங்க, இந்தப் பொண்ணுக்கு என்ன பதில் சொல்லப் போறீங்க?

பிரசாத்: என்ன பதில் சொல்லச் சொல்றீங்க?

சிவ: உங்களில் யாராவது ஒருத்தன் முன்வந்து அவளுக்கு வாழ்வு அளிக்க வேண்டும்.

கல்யாணி: சார், என்ன சார் சொல்றீங்க? மிருகத்தை விடக் கேடு கெட்ட இவங்கள்ள ஒருத்தன் எனக்கு வாழ்வு அளிக்கிறதா? இந்த மாதிரி கேட்டு என்னை அவமானப் படுத்தாதீங்க, சார்!

சிவ: கல்யாணி! உன் மனசைப் புரிஞ்சுக்காம பேசிட்டேம்மா! இவுங்களுக்கு ஒரு முடிவு நீ தாம்மா சொல்லணும்!

கல்யாணி: என்னைக் கொடுமைப் படுத்தின இவங்க சட்டத்திற்கு முன்னால் மண்டியிடணும். தன் பெண்ணுக்கு நேர்ந்த அவமானத்தை எண்ணி எப்படி என் தகப்பனார் நெருப்பிலே வெந்து கருகினாரோ, அதே போல இவங்களும் வெந்து கருகணும் சார். வெந்து கருகணும்.

(கல்யாணி உள்ளே போகிறாள்)

பிரசாத்: சாபம் கொடுத்துட்டுப் போறாடா...

சிவ: பிரசாத்! உங்களுக்குக் கடைசி எச்சரிக்கை. நீங்கள் மனிதர்கள்னு நிரூபிக்கணும்னா நடந்த குற்றத்தை ஒப்புக்கொண்டு போலீசுல சரணடையுங்க.

காள: நாங்க குற்றம் செய்தோம்னு நிரூபிக்க என்ன சாட்சி இருக்கு?

ஏழுமலை: அடப் பாவி! தெய்வம் சும்மாப் பார்த்துக்கிட்டு இருக்குமா? அது வந்து சாட்சி சொல்லும்!

காள: தெய்வம் கோர்ட் படி ஏறி வந்து சாட்சி சொன்னதாகச் சரித்திரம் கிடையாது!

ரங்க: யப்பா, யப்பா! மதுரைக்குப் போயிருக்கியா நீ? வன்னி மரத்தை ஜனங்க சுத்தி வராங்களே, அந்தக் கதை தெரியுமா உனக்கு! செட்டிப் பொண்ணுக்கு வன்னி மரமே கோர்ட்டிலே வந்து சாட்சி சொல்லியிருக்குப்பா!

காள: அந்த நந்தி ஹில்க பங்களாவிலே வன்னி மரம் இல்லே! ஆலமரம் இருந்தது. அது வந்து கோர்ட்டில சாட்சி சொல்லட்டும். வேடிக்கை பாருங்க. டே, பிரசாத்! வாடா போகலாம்.

ஏழுமலை: (வழி மறித்து) உங்களை நான் போக விட மாட்டேன். இந்தப் பொண்ணுக்கு வழி சொல்லிட்டுத்தான் போகணும்.

சர்மா: (ஓடி வந்து) நாயுடுகாரு! அவுங்க போகட்டும். உலகத்துல எந்த மூலையில் போய் அவுங்க ஒளிஞ்சாலும் தெய்வத்துக்குப் பதில் சொல்லியே ஆகணும்.

சிவ: தெய்வத்துக்குப் பதில் சொல்றாங்களோ என்னமோ, இந்த சிவராமனுக்கும் அவனுடைய பேனாவுக்கும் அவுங்க பதில் சொல்லியாகணும். பிரசாத், உங்க மூணு பேருக்கும் எழுபத்திரண்டு மணி நேரம் டயம் தரேன். அதற்குள்ளே நீங்க போலீசுலே போய்ச் சரண் அடையல்லேன்னா உங்களைக் கொண்டு போய் நிறுத்த வேண்டிய இடத்தில் நிறுத்தித் தண்டனையை வாங்கிக் கொடுக்காம விடமாட்டேன்.

பிரசாத்: (சிரித்து) எழுபத்திரண்டு மணி நேரம்! எழுபத்திரண்டு வருஷம் ஆனாலும் அதை உன்னால சாதிக்க முடியாது. பை... பை. (மூவரும் வெளியேறுகின்றனர்.)

(தொடரும்)



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகளின் ஆசியுடன்**

## எஸ். கே. பி. டி. அறக் கட்டளை

**ஹோசூர், தர்மபுரி மாவட்டம், தமிழ்நாடு**

### ஒரு வேண்டுகோள்

அன்புடையீர்,

தர்மபுரி மாவட்டத்திலுள்ள ஹோசூர் என்ற ஊர், பத்ரகிரி காசி என்று புகழ் பெற்றது. இது பூஜ்யர் ராஜாஜி அவதரித்த பேறு பெற்ற ஊர். பெங்களூரிலிருந்து 25 மைல் தூரத்தில் உள்ளது. இத்தலத்தில் 150 ஆண்டுகளுக்கு முன்பு மிகப் புராதனமான கோயில் **கன்னிகா பரமேஸ்வரி, விநாயகர் நவக்கிரஹம்** பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இப் புராதன கோயில் இன்று சிதிலமடைந்து உடனே புதுப்பிக்க வேண்டிய நிலையிலுள்ளது **எஸ். கே. பி. டி.** அறக்கட்டளை இப் புனித கைங்கர்யத்தை மேற்கொண்டிருக்கிறது. இப் புனிதக் கோயிலைப் புதுப்பிப்பதோடு ஒரு சத்திரம் கட்டி அதில் திருமணம் போன்ற பல மதச் சடங்குகள் நடக்கவும், வேதம், சம்ஸ்கிருதப் பாடங்களை இளம் பையன்களுக்குக் கற்றுத் தரவும் திட்டமிடப்பட்டுள்ளது.

இந்தப் புதுப்பித்தல் திருப்பணிக்கும் மற்றும் இதர பணிகளுக்கும் இன்ஜினீயர்கள் ரூ. 3 லக்ஷம் முதல் 3½ லக்ஷம் வரை செலவாகும் என்று திட்டமிட்டிருக்கிறார்கள். இந்த நற்பணிக்குத் தர்ம சிந்தனையாளர்கள் நன்கொடையளிக்க முன் வந்து தெய்வ அருளுக்குப் பாத்திரர்களாகக் கோருகிறோம். ரூ. 5000/- அளிக்கும் போஷகர்களின் பெயர்களை புதிதாகக் கட்டப்படும் அறைகளில் பொறிக்கப்படும். ரூ. ஆயிரம் நன்கொடையளிப்பவர்களின் புகைப்படம் புதிய கட்டிடத்தில் வைக்கப்படும். நன்கொடையளிக்க விரும்புபவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்.

**கே. எஸ். மூர்த்தி,** தலைவர்

எஸ். கே. பி. டி. அறக்கட்டளை, ஹோசூர், தர்மபுரி மாவட்டம், தமிழ்நாடு



# ஸ்ரீ டெக்ஸ்டைல்ஸ் - ஷோ-ரூம்

போன் : 70966

**விஜயலக்ஷ்மி தியேட்டர் சமீபம்**

319, சிக்பேட், பெங்களூர் - 560053

இன்பம் பொங்கும் பொங்கல் பண்டிகையை மகிழ்வுடன் கொண்டாட உங்களுக்குத் திருப்தி அளிக்கும் ஜவுளிகளைத் தேர்ந்தெடுக்க உடனே எங்கள்

ஸ்ரீ டெக்ஸ்டைல்ஸ் ஷோ - ரூமுக்கு வருகை தாருங்கள்

**கண்ணைக்கவரும் வண்ண வண்ண டிசைன்களில் புதிய ரகங்கள், மில் புடவைகள், கைத்தறி சேலைகள் மற்றும் டிரஸ் மெட்டீரியல்களுக்கான ஜவுளிகள், சூட்டிங்ஸ், ஷர்ட்டிங்ஸ் ஏராளமாக வந்துள்ளன.**

**மலிவான ஒரே விலை**

**Sri Textiles** Phone : 70966

319, Chickpet, Bangalore - 560053

9-1-77 ஞாயிற்றுக்கிழமை விற்பனை உண்டு

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | டிரஸ் சென்டர்,, மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே ஹால் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு. கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் சப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3-5 | |
| ,, செவ்வாய்பேட்டை | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | M/s. அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ணா மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கல்பட்டு | 21 | காலை 10-00 - 11-00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சீப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | மீனாட்சி போட்டோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ணா மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 9-11 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், தியசாலை. |
| ,, | 23 | மாலை 4-6 | |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாசவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை 3-5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 4 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87) திருச்சி ஜில்லா

# கிடு கிடு உயர்வும் மள மளச் சரிவும்!

டில்லியில் கடுங் குளிர். கடுங் குளிருக்குப் பழக்கமான இங்கிலாந்து கோஷ்டிக்கு முதல் டெஸ்டில் இன்னிங்ஸ் வெற்றி. வெங்கட்டுக்கும் டில்லிக்கும் ராசியில்லை. இந்தியத் தலைநகரில் 'இழந்த' புகழைத் தமிழகத் தலைநகரில் சரிக்கட்டிப் புகழேணியில் திரும்ப ஏறவேண்டிய 'பரமபத' சோபான கட்டம். ரஞ்சிக் கோப்பைப் பந்தயம் தமிழக காப்டன் வெங்கட்டின் புகழை மறுபடியும் நிலைநிறுத்தியிருக்கிறது. கர்நாடக அணிக்கும் தமிழக அணிக்கும் நடைபெற்ற ரஞ்சிக் கோப்பைப் பந்தயத்தில் தெற்கத்திய சாம்பியன் பட்டம் வெங்கட் கோஷ்டிக்கு! கர்நாடக அணியின் தலைசிறந்த பாட்ஸ்மன் விசுவநாத் விக்கெட் காப்டன் வெங்கட்டுக்கு; ரஞ்சிப் பந்தயத்தில் இவருக்கு இது 350வது விக்கெட்!

**சதம் கண்ட மூவர்**

தமிழக அணிக்கு வெற்றி கிட்ட உதவியவர்களில் சதம் கண்ட சிவராமகிருஷ்ணனும் ஒருவர். ஒரு ஸிக்ஸர், [illegible] பவுண்டரி அடித்தார். இவரது ஒரு 'ஷாட்'டுக்கு ஏழு ரன்! ஆச்சரியமாயிருக்கிறதா? ஓடியே எடுத்த மூன்று ரன்களும், 'ஓவர் த்ரோ'வில் போனஸாகக் கிடைத்த நாலு ரன்களும் சேர்ந்து கொண்டன. ரஞ்சிக் கோப்பையில் இவரது முதல் சதம் இது. 'கிறிஸ்துமஸ் பரிசு' என்று சிவராமகிருஷ்ணன் ஆட்டத்தை வர்ணித்தன பத்திரிகைகள். 'கல்யாணப் பரிசு' என்று கூடச் சொல்லலாம்! இந்த ஆட்டக்காரரின் கரம் பற்றப் போகிற அதிர்ஷ்டசாலி அன்று அடைந்திருக்கக்கூடிய மகிழ்ச்சி. கொஞ்ச நஞ்சமாகவா இருந்திருக்கும்?

தமிழக அணியின் சதம் கண்ட மற்றொரு பாட்ஸ்மன் டி. ஈ. சீனிவாசன். இவரது ஒரு ஸிக்ஸரும், 19 பவுண்டரிகளும் பல கோணங்களில் சென்று 130 ரன்களாகக் குவிந்தன.

கர்நாடக அணியில் சதம் கண்டவர் பி.பி பட்டேல். இவர் கர்நாடக அணியின் மானத்தைக் காத்தவர்.

**புது அறிமுகம்**

வி. வி. குமார் கையில் அடிபட்டு ஆட இயலாமல் போகவே, இடதுகை சுருள் பந்து வீச்சாளர் வாசுதேவன் அறிமுகமானார். இவர் ஆல்ரௌண்டர்! இவரது முதல் ரஞ்சி விக்கெட் சுதாகர்ராவினுடையது. இவர் எடுத்த விக்கெட்கள் இரண்டு.

**சில விசேஷங்கள்**

முதல் இன்னிங்ஸ் அதிக எண்ணிக்கை தமிழக அணிக்கு ஐந்து பாய்ண்ட் தந்தது. இந்தக் கிடுகிடு உயர்வு இரண்டாவது இன்னிங்ஸில் மளமளச் சரிவாக மாறியது. கர்நாடக அணி ஆக்ரோஷமாக ஆடி 112 ரன்களில் ஏழு விக்கெட்டை எடுத்தது! ரமேஷ் எடுத்த நாலு விக்கெட்; சஞ்சய் தேசாய் பிடித்த நாலு காட்சுகள்; தமிழக அணியில் நாலு பூஜ்யம்; ரஞ்சிக் கோப்பையில் முதல் தடவையாக பாட்ஸ்மன் விசுவநாத் பந்து வீசிச் சிவராமகிருஷ்ணனின் விக்கெட் எடுத்தது முதலியன குறிப்பிடத்தக்க அம்சங்கள்.

— குண்டுமணி



சதம் கண்ட
சீனிவாசனும் (இடது)
சிவராம
கிருஷ்ணனும் (வலது)

# க்ராக்ஜாக் 'ருசிப் போர்'

தித்திப்பே இது!




## சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

## பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!




everest/700/PP-tm

# சேரமான் காதலி

## அத்தியாயம் 7

## பட்டி மண்டபம்

விவாத மண்டபம் நிரம்பி வழிந்தது.

மன்னவர் நீண்ட நாட்களுக்குப் பிறகு சமய, இலக்கிய, தத்துவக் கலந்துரையாடலில் ஈடுபட்டதால் பலதுறை அறிஞர்களும் அங்கே கூடியிருந்தார்கள்.

கணிசமான அளவில் பெண்களும் குழுமியிருந்தனர், சலீமா, ஜெபுன்னிஸா உள்பட.

சாந்துப் பொட்டும், சந்தணப் பொட்டுமாக அரசரின் நெற்றி விளங்கியது.

தாள முடியாத ஒரு தோல்விக்குப் பிறகு எந்த ஒரு மனிதனின் சமயப் பற்றும் உறுதி செய்யப்படுகிறது.

பெரும்பாலும் மரணத் தறுவாயில் பெருக்கெடுக்கும் சமயப் பற்று, சிலரது வாழ்வில் முன்கூட்டியே பெருகத் தொடங்குகிறது.

மூன்றும் சேரமான் இப்போது இறை வழிபாட்டில் தம்மை மறந்து கொண்டிருக்கிறார்—

ஆகவே சமய உணர்வின் வெளி அலங்காரம் அவரையும் கவர்ந்ததில் ஆச்சரியமில்லை.

மன்னவர் என்ன கேள்வி கேட்கப் போகிறார் என்று சபை ஆவலோடு எதிர்பார்த்தது.

அவர் கேள்வியைத் தொடங்கினார்.

''அதிகாலையில் சேவல் ஏன் கூவுகிறது? கோழி ஏன் கூவுவதில்லை?''

—அவையினர் சிரித்தார்கள்.

''உங்களுக்குச் சிரிப்பாக இருக்கிறது. காரணம் இது மிகவும் சாதாரணக் கேள்வி என்பதால். 'கோழி முதலிலா, முட்டை முதலிலா?' என்பதும் சாதாரணக் கேள்விதான். ஆனால் இதுவரை யாரும் இதற்குப் பதில் சொன்னதில்லையே? இப்பொழுது என் கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்'' என்றார் சேரமான்.

ஒருவர் சொன்னார்: ''ஆண்கள் எப்பொழுதுமே அவசரக்காரர்கள். விடிவதற்கு முன்பே விடியப் போகிறது என்று சத்தமிடுவார்கள். பெண்கள் நிதானமானவர்கள். பொழுது விடிந்து விட்டதை உறுதி செய்த பிறகுதான் அதைப் பிறருக்குச் சொல்வார்கள்.''

சேரமான் சிரித்துச் சொன்னார்:

''உண்மை அதுவல்ல. உலகைத் துயில் எழுப்ப வேண்டியவன் இறைவனே. அவனைத் துயில் எழுப்ப வேண்டியவள்தான் இறைவி. எதையும் தொடங்கி வைக்கும்படி தன் மணாளனுக்குக் காலை நேரத்தில் அவள் கட்டளை இடுகிறாள். இறைவன் அதை உலகுக்கு அறிவிக்கிறான்.''

—அவையினர் கைதட்டினார்கள்.

உடனே சலீமா எழுந்து கேட்டாள்:

''இறைவனுக்கு ஓர் இறைவி இல்லாத சமயங்களுக்கு நீங்கள் சொல்வது பொருந்துமா?''

சேரமான் சொன்னார்:

''இறைவனுக்கு இறைவி இல்லாத சமயமே இல்லை. வன்மையின் மறுபுறம் மென்மை. ஆண்மையின் மறுபகுதி பெண்மை. புறத் தோற்றத்தில் சைவ, வைணவ சமயங்கள் இறைவியை வைத்திருக்கின்றன. மற்ற சமயங்கள் அகத் தோற்றத்திலே அவற்றை அடக்கியுள்ளன. அறிவறியாத பாமர மக்களுக்குப் புரிய வைப்பதே புறத் தோற்றப் படைப்பு.''

—சலீமா திருப்தியுற்றவளாக அமர்ந்தாள்.

ஜெபுன்னிஸா சும்மா இருப்பாளா? ''அப்படியென்றால் காதல் உணர்வு இறைவனுக்கும் உண்டா?'' என்று கேட்டாள்.

''உண்டு. இறைவனது காதல் உணர்வு வெறும் சரீர இச்சையன்று. அது பிறப்பின் மூலத்தைக் குறிக்கும் தத்துவம். உயிரினங்களை அதிகரிக்கச் செய்யும் உணர்ச்சி பூர்வமான தத்துவமே, காதல் என்பது. மானுடம் அதை நோக்கும் முறை வேறு. வாழ்வின் சுவையான பகுதி என்றே அதை அது அணுகுகிறது. அதன் மூலம் சில பிறப்புகளுக்கு அது காரணமாகி

கண்ணதாசன்

றது. இறைவனது காதலில் நிகழ்ந்ததே மனித உற்பத்தி. மனிதனது காதலில் நிகழ்வதே பிரஜா உற்பத்தி. முன்னது ஆன்மாவில் எழுவது; பின்னது சரீரத்தில் எழுவது'' என்றார் சேரமான்.

''இதைப் புரிந்து கொள்வது கடினமாக இருக்கிறது'' என்றாள் ஜெபுன்னிஸா.

''அப்படித்தான் இருக்கும். உங்களுக்கு இன்னும் அந்த அனுபவம் இல்லை யென்று நினைக்கிறேன்'' என்றார் சேரமான்.

ஜெபுன்னிஸா கைகளால் முகத்தை மூடிக்கொண்டு உட்கார்ந்து விட்டாள்.

சலீமா தலையைக் குனிந்தபடி கால் பெருவிரலால் கோலம் போட்டாள்.

ஒரு வாலிபர் எழுந்து சேரமானைப் பார்த்துக் கேட்டார்:

''பெண்களுக்குப் பருவம் வந்து விட்டது ஒரு குறிப்பிட்ட நாளில் உணரப்படுகிறது. ஆனால் ஆண்களுக்கு அப்படி இல்லையே? ஓர் ஆடவன் பருவம் அடைந்து விட்டதை எப்படித் தீர்மானிப்பது?''

சேரமான் சிரித்துக் கொண்டே சொன்னார்:



''மாமரம் பருவமடைந்து விட்டதை அதன் புஷ்பங்கள் காட்டுகின்றன. ஆனால் பலாமரம் பருவமடைந்ததை எது காட்டுகிறது? ஆடவன் பருவமடைந்து விட்டதை அவன் கண்களே வெளிப்படுத்துகின்றன, பலா மரத்தில் காய்கள் வெளிப்படுத்துவது போல்.''

அந்த வாலிபர் குறும்பாக மேலும் கேட்டார்:

''ஆடவர் பருவம் அடைவதற்கும் ஆண்டவன் ஓர் ஏற்பாட்டைச் செய்திருந்தால் என்ன?''

''செய்திருக்கலாம். நீங்கள் ஆண்டவனாக இருந்திருந்தால்!'' என்றார் சேரமான்.

ஒரு முதுபெரும் அறிஞர் எழுந்து கேட்டார்:

''பிராணிகளில் மலடுகள் அதிகம் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் மனித ஜாதியில் சில பெண்கள் கருவுறுகிறார்கள்; சிலருக்கு அந்தப் பாக்கியம் இல்லை. அது ஏன்?''

இந்தக் கேள்வி சேரமானின் நெஞ்சில் அடிப்பது போலிருந்தது. அவரது கண்கள் கலங்கின.

பத்மாவதிக்காக ஒரு கண்ணும், யூஜியானாவுக்காக ஒரு கண்ணும் அழுதன.

புரிந்துகொண்ட அவையினர் கேள்வி கேட்டவரை முறைத்துப் பார்த்தனர்.

சலீமா கூட சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்தாள்.

ஜெபுன்னிஸா நிலைமையைத் திசை திருப்ப முயன்றாள்.

''எந்த வயதிலும் சிலர் அழகாக இருக்கிறார்கள். சின்ன வயதிலேயே சில பேர் வயதானவர்களாகக் காட்சியளிக்கிறார்கள். அது ஏன்? என்னுடைய கேள்வியால் மன்னருக்குத் திருஷ்டி பட்டுவிடக் கூடாது!'' என்றாள் ஜெபுன்னிஸா.

அந்தத் தாக்குதலை இந்தப் பாராட்டுரை சமாளித்துவிடும் என்று அவள் கருதினாள்.

''அது அவரவருக்கும் இறைவன் வழங்கும் அளவு'' என்றார் சேரமான்.

சலீமா ஒரு பெருமூச்சு விட்டாள்.

''மனத்தினாலேயே மனிதர்கள் அலைக்கழிக்கப்படுகிறார்கள். அந்த மனம் மட்டும் மனிதர்களுக்கு இல்லாமல் இருந்திருந்தால்...?'' என்று கேட்டாள் சலீமா.

'' 'மனஸ்' என்கிற வடமொழி மூலத்தில் இருந்துதான் 'மனுஷ்யன்' என்ற வார்த்தை வந்தது. அதுவே மனிதன்




புதிர் விடை

என்று மருவிற்று. 'மன்' என்ற தமிழ் வார்த்தைக்கும் 'மனிதன்' என்றே பொருள். மனத்தைக் கொண்டே மனிதன் நிர்ணயிக்கப்படுகிறான். விலங்குகளுக்கு ஐந்தறிவு என்றும், மனிதர்களுக்கு ஆறறிவு என்றும் கூறப்படுகிறது. மனிதர்களையும், விலங்குகளையும் பிரித்துக் காட்டுவது இந்த ஆறாவது அறிவல்ல; மனம் ஒன்றே. மாமரத்து விறகுகளை எரிய விட்டே அதில் விளைந்த மாங்காய்களைக் கொதிக்க வைப்பது போல், மனத்தைத் துடிக்க வைத்தே மனிதனைக் கொதிக்க வைக்கிறான் இறைவன். மிகவும் உறுதியானது என்று மனம் நம்புகின்ற ஒன்று, பொய்யாகி விடுகிறது. பொய் என்று கருதுவது உண்மையாகி விடுகின்றது. இந்த பேதங்களும், சலனங்களுமே அறிவைப் போய்த் தொடுகின்றன. ஆகவே, மனம் இல்லையென்றால் அறிவுக்கு வேலை இல்லை. இரண்டும் இல்லையென்றால் யாருக்கும் தொல்லை இல்லை; எனக்குக் கூட!'' என்றார் சேரமான்.

அவர் பேசப் பேச அவரையே கவனித்துக் கொண்டிருந்தாள் சலீமா.

அவளது பாதி முகத்தை மூடியிருந்த கறுப்புச் சல்லாத் துணியை, அவளது பெருமூச்சு தாலாட்டிற்று.

உடனே ஜெபுன்னிஸா எழுந்து ''பாரத சங்கீதத்தில் ஆரோகணம், அவரோகணம் என்று பேசப்படுகிறதே, அவை என்ன?'' என்று கேட்டாள்.

''ஆரோகணம் ஆசையில் முன்னேறுவது; அவரோகணம் அதில் தோல்வியுற்று வீழ்ச்சி யடைவது'' என்றார் சேரமான்.

''சிலர் சோகமான இசையையே விரும்புவதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டாள் ஜெபுன்னிஸா.

''அது அவரவர் நாடி நரம்புகளைப் பொறுத்தது. சில நாடிகளில் சில உணர்வுகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. அந்த உணர்வுகளுக்குத் தோதான இசை அவற்றைத் தொடும்போது ஐக்கியமாகி விடுகின்றன. எனக்கும் கூட சோக இசைதான் பிடிக்கிறது'' என்றார் சேரமான்.

உடனே முன்பு கேள்வி கேட்ட அதே வாலிபர் எழுந்து, ''அவை கூடியதிலிருந்து அந்த இரண்டு பெண்கள் மட்டுமே கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறார்களே, அது ஏன்?'' என்று கேட்டார்.

''மற்றவர்களை விட அவர்கள் அறிவாளிகள் போலிருக்கிறது!'' என்று குத்தினார் சேரமான்.

சலீமாவுக்கும் ஜெபுன்னிஸாவுக்கும் உற்சாகம் காலிலிருந்து தலை வரையில் 'ஜிவ்'வென்று ஏறியது.

விவாத நேரம் முடிந்து விட்டதற்கான மணி ஓங்கி ஒலித்தது.

எல்லோரும் எழுந்து நின்றார்கள்.

சேரமான் பெருமாள் உள்ளே போன பிறகுதான் மற்றவர்கள் வெளியே போக வேண்டும்.

அவர் எல்லோருக்கும் வணக்கம் செலுத்தி விட்டு, உள்ளே சென்றார். மற்றவர்கள் வெளியேறினார்கள்.

சலீமாவும், ஜெபுன்னிஸாவும் தங்களை மறந்த நிலையில் அங்கேயே நின்றார்கள்.

''அரசரது திருவுள்ளம் ஓர் ஆழமான சுரங்கம். அவர் ஓர் அறிவுக் கடல். நான் கேரள தேசத்துக்கு வந்ததற்குப் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றாள் சலீமா.

''வெளி உலகைக் கண்டாலே பயப்படுகிற நீ அதற்குள் எப்படி இவ்வளவு விவரம் தெரிந்தவளானாய்?'' என்று கேட்டாள் ஜெபுன்னிஸா.

''ராஜ தரிசனமே காரணம்!'' என்றாள் சலீமா.

இரண்டு பேரும் வெளியேறப் போகும் போது சலீமாவின் காலில் ஏதோ குத்திற்று. கீழே குனிந்து சலீமா அதை எடுத்துப் பார்த்தாள்.

அரசர் மார்பில் அணிந்திருந்த தங்க மணி மாலையில் இருந்து விழுந்துவிட்ட ஒரு பதக்கம் அது.

அந்தப் பதக்கம் அராபியாவில் செய்யப்பட்டது. அதே போன்ற ஒரு பதக்கத்தைச் சலீமாவும் வைத்திருந்தாள்.

கீழே கிடந்து எடுத்த பதக்கத்தைத் திறந்து பார்த்தாள் சலீமா. அதில் ஓர் அழகான பெண்ணின் ஓவியம் இருந்தது.

ஆம்; ஜூலியானா!

(தொடரும்)

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி விவசாய எந்திரக் கருவிகள்



இன்றோ வளமடைந்தது இன்ப நாள் இதோ

முன்னேற்றத்தின் இரகசியம்—

## ஜோதி விவசாய எந்திரக் கருவிகள்




வேளாண்மையை ஒரு தொழிலாக மதிப்பவர் இன்றைய விவசாயி. எனவேதான், தரமான விவசாய எந்திரங்களை நாடுகிறார். ஜோதியின் அதி நவீன ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத உழைப்பின் பயனே ஜோதி விவசாய எந்திரக் கருவிகள். இதன் காரணமாகத்தான் ஜோதி பம்பு, மோட்டார், ஸ்டார்ட்டர், கதிரடிப்புக் கருவி, மற்றும் இதர விவசாய எந்திரங்களிலே முழு நம்பிக்கை வைத்திருக்கிறார் அவர். நெடுங்காலம் உழைப்பதோடன்றி, மின்செலவைக் குறைத்துதவுகின்றன இந்த எந்திரங்கள்.



**ஜோதி லிமிடெட்**, பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

கிளை: எயர் லைன்ஸ் ஹோட்டல், 177/179 மவுண்டு ரோடு, சென்னை. போன்: 85007.

everest/27/JY-tm




டெலிபோன் பெட்டியைவிட்டு வெளியில் வந்தாள் மாலா.

பிற்பகல் நேரம்தான். ஆனால் அந்தி மாலைப் பொழுதைப் போல் இருண்டிருந்தது.

காலையிலிருந்து நல்ல மழை. இனியும் மழை பெய்யத்தான் போகிறது. பருவ மழை. அதனை அந்தப் பருவக் காற்று பொய்க்காமல் தந்துவிட்டது.

அவர்கள் நாடகத்தின் தலைப்பும் அதுதான். 'பருவக் காற்று !' விஜய்மாலா தியேட்டர்சாரின் இரண்டாவது தயாரிப்பு.

விஜயும் மாலாவும் சேர்ந்துதான் அந்த நாடகக் குழுவைத் தொடங்கினார்கள். முதல் நாடகம். 'தென்றல்' ! பெயருக்கேற்ற மாதிரி அது பட்டும் படாமலும் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடந்தது.

அடுத்த படைப்புதான் 'பருவக் காற்று' ! அதற்கு மகத்தான வெற்றி. பத்திரிகைகள் ஒரு சேரப் புகழ்ந்துவிட்டன. சபாக்கள் போட்டி போட்டுக் கொண்டு தேதி கொடுக்கின்றன. அடுத்த மாதம் பதினேழு புரோக்கிராம் ! ரிகார்ட் புக்கிங். இவ்வளவுக்கும் முழு முதற் காரணம் – மாலாவின் நடிப்புத்தான். பாத்திரத்தோடு ஒன்றிய அவளது நடிப்பு நாடகத்தை வெற்றியின் உச்சியில் கொண்டு போய் நிறுத்திவிட்டது. ஒரு படாதிபதி மாலாவைக் கதாநாயகியாக நடிக்க ஒப்பந்தம் செய்துவிட்டார். கூடிய விரைவில் அவள் பெரிய நட்சத்திரமாகி விடுவாள் என்பதே அனைவரது கணிப்பும்.

வெண்ணெய் திரண்டு வருகிறது. இந்தச் சமயத்தில் அவளே தாழியை உடைக்கிறாள்.

"வேறு வழியில்லை. நான் அதைச் செய்தேயாக வேண்டும் !" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள் அவள். ஃபோனில் ரகுபதியைக் கூப்பிட்டுத் தன்னுடைய ரோலுக்கு வேறு பெண்ணைப் போட்டுக் கொள்ளுமாறு கூறிவிட்டாள் அவன் விஜய்க்குத் தகவல் தருவான். விஜய் விழுந்தடித்துக் கொண்டு தன் வீட்டுக்குத் தன்னைத் தேடி வருவான்.

கால்கள், எந்தப் பக்கம் போவது என்று தெரியாமல் மருகின. வீட்டுக்குப் போக மனமில்லை. ஏனென்றால் விஜய் தேடி வரும் பொழுது நாம் வீட்டில் இருக்கக் கூடாது என்று அவள் நினைத்தாள். அவன் கொஞ்சம் தவித்துத் தடுமாற வேண்டும்.

ஆனால் ஒரு சந்தேகமும் எழுந்தது. 'விஜய் வருவாரா ? நாடகத்துக்கு நல்ல பெயர் வந்துவிட்டது. தேதிகளும் நிறைய இருக்கின்றன. மாலா நடிக்காவிட்டால் என்ன.... எவளாவது ஒரு லீலா.... என்று விஜய் வராமலே இருந்துவிட்டால்...?'

அவள் மனம் அப்போதுதான் சிறிது பயந்தது. கலங்கியது.

'ஒருவேளை விஜய் அப்படியும் செய்து விடுவாரோ ?'

'ஏன் செய்ய மாட்டார் ? அவர் விரும்புவதெல்லாம் சினிமா எழுத்தாளராக வேண்டும் என்பதுதான். நாடகங்களை எழுதிப் பெயர் வாங்கி அதிலிருந்து திரை உலகுக்குத் தாவி விட வேண்டும் என்பதுதானே அவர் திட்டம் !'

அந்தத் திட்டம் மாலாவுக்கு முன்னாலேயே தெரியாது. தெரிந்திருந்தால் இந்தக் கலை உலகத்தில் பிரவேசிக்க விடாமல் விஜயை அவள் தடுத்திருப்பாள்.

போன வருஷம் இதே மாதிரி ஒரு மழைக் கால மாலை நேரத்தில் —

மாட்னி ஷோ பார்த்துவிட்டு ஏ. ஸி. ரெஸ்டாரெண்ட் அறையில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த பொழுது —

"ஏன் மாலா... நாம் ஒரு நாடகக் குழு ஆரம்பித்தால் என்ன? உனக்கும் திறமை இருக்கிறது. எனக்கும் நாடகம் எழுத வேண்டும் என்ற ஆசை இருக்கிறது..."

அந்த நேரத்தில் அந்த யோசனை மாலாவுக்கு ஒரு கிளர்ச்சியைத் தந்தது. அத்துடன் ஒரு சந்தேகமும் எழுந்தது.

"நாம் ஆரம்பித்தால் சான்ஸ் கிடைக்குமா ?"

"ஏன் கிடைக்காது? என்னுடைய நண்பன் ரகுபதி — உனக்கும்தான் தெரியுமே... அவனுக்குச் சபா காரியதரிசிகளையெல்லாம் நல்ல பழக்கம். ரகுபதியைக் காரியதரிசியாகப் போட்டுவிட்டால் குறைந்தது இருபது இருபத்தைந்து சபாக்களில் 'டேட்ஸ்' வாங்கி விடுவான்...."

மாலா சாப்பிடுவதை நிறுத்திவிட்டாள். நாடகக் குழு யோசனை அவள் நெஞ்சில் ராணுவ நடை போட்டது. திடீரென்று வேறொரு கேள்வியும் இடறியது.

"விஜய்... நாடகக் குழு ஆரம்பிப்பது சரி..... நம் திருமணத்தைப் பற்றிப் பேச்சே எழவில்லையே ?"

திருமணம் ! அவள் மிகவும் ஆவலோடு எதிர்பார்த்திருக்கும் சுப காரியம். அதை விட நாடகம் ஒன்றும் முக்கியமில்லையே !

"திருமணம்... !" என்று தோள்களை உயர்த்திக் கைகளை விரித்தான் விஜய். "எப்போது வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். நாளைக்கேகூட நான் தயார். ஆனால் அதற்கென்ன அவசரம் ? நாம் எதையாவது உருப்படியாகச் சாதிக்க வேண்டும். விஜய்... மாலா... விஜய்... மாலா என்று இந்தச் சென்னை நகரம் முழுவதும் நம்மைப் பற்றிப் பேச வேண்டும். அதன் பிறகு நம் விவாகம்" என்று அவளுடைய கைகளைப் பற்றினான்.

அதை மாலா இப்போது நினைத்துக் கொண்டாள்.

'நாளைக்கே திருமணத்தை வைத்துக் கொள்ளலாம்' என்று அன்று சொன்ன

சொல் எங்கே? போன வாரம் கூறிய வார்த்தை எங்கே?

நாடகம் முடிந்ததும் —

ஸ்கூட்டரில் மாலாவை அவள் வீட்டில் கொண்டு விட்டான் விஜய்.

'' குட் நைட்.... மாலா... நாளைக்குச் சந்திப்போம்...'' என்று விஜய் ஸ்கூட்டரைக் கிளப்பிய பொழுது —

'' ஒரு நிமிஷம்... உள்ளே ஒரு நிமிஷம் வந்துவிட்டுப் போங்கள்...'' என்றாள் மாலா.

'' ஏன் ? . இப்போ ரொம்ப நேரமாகிவிட்டது. புறப்படட்டுமா ?''

''பரவாயில்லை... வாருங்கள்...''

'' என்ன விஷயம் சொல்லேன்.''

'' தெருவிலேயே நின்று கொண்டு பேச வேண்டுமா ?'' என்று மெதுவாகச் சீறினாள் மாலா.

'' சரி ! நம்முடைய கல்யாண விஷயம் தானே ? கொஞ்ச நாள் பொறுத்திரு.... '' என்றான் விஜய் அசுவாரசியமாக.

'' இல்லை. நான் இனி தாமதிப்பதற்கில்லை.... சீக்கிரம் கல்யாணத்தை நடத்த வேண்டும்.''

தெருவிலேயே பிரச்னை கிளம்பிவிட்டது. விஜய் இன்ஜினை நிறுத்திவிட்டுச் சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

'' நானும் இந்த மூன்று நாலு மாதமாகக் கேட்கிறேன். 'பொறுத்திரு ! பொறுத்திரு' என்றே பதில். இன்னும் எத்தனை நாளைக்குப் பொறுத்திருப்பது ? நான் கிழவியாகும் வரையா ?''

விஜய்க்குச் சிரிப்பு வந்தது. சிரித்தான்.

''சிரிக்காதீர்கள்.... எனக்குப் பற்றி எரிகிறது.......''

'' பிறகு என்ன செய்யச் சொல்றே ? அழட்டுமா..... ?''

'' அழுவதற்குத்தான் நான் இருக்கிறேனே!'' என்று சொன்ன போது மாலாவின் குரல் கிணற்றுக்குள்ளிருந்து வருவது போல் இருந்தது.

'' இதோ பார் மாலா. நீ எனக்குத்தான். நான் உனக்குத்தான். அதில் எந்தச் சந்தேகமும் இல்லை. ஆனால் வாழ்க்கையில் எனக்கு ஒரு லட்சியம் இருக்கிறது....'' என்று அவன் அவளைத் தேற்ற முயன்றான்.

'' என்ன லட்சியம்...?'' என்று கேட்டாள் மாலா.

'' நான் ஓர் எழுத்தாளனாக வேண்டும். அதாவது சினிமா கதாசிரியர். அது வரையில் திருமணம் இல்லை. இதுவே முடிவான வார்த்தை !''

மாலாவுக்கு இடி விழுந்த மாதிரி இருந்தது.

இந்த லட்சியம் அவளுக்கு முன்பே தெரிந்திருந்தால்....?

எப்படித் தெரியும்? விஜய்தான் 'நாளைக்கே நாளைக்கே' என்று சொல்லிச் சொல்லி நம்ப வைத்து நாட்களைக் கடத்திவிட்டானே !

ஆனால் இனிமேல் அந்தப் பசப்பு வார்த்தைக்கு இடமில்லை. முதலில் கல்யாணம். பிறகுதான் நாடகம் — சினிமா — மண்ணாங்கட்டி. விஜயை இணங்க வைப்பதற்கு ஒரே வழி — நாடகத்தில் நடிக்க முடியாது என்று சொல்வதுதான்.



மாலா அதைச் சொல்லிவிட்டாள் — தெளிவாக.... உறுதியாக.

மாலா கடிகாரத்தைப் பார்த்தாள். மணி நான்கு.

ரகுபதிக்குப் போன் செய்து ஒரு மணி நேரமாயிற்று. இந்நேரம் ரகுபதி விஜயிடம் சொல்லியிருப்பாரா? விஜய், வீட்டுக்கு வந்திருப்பாரா...?

டிபார்ட்மெண்டல் ஸ்டோர்... புக்ஸ்டால் என்று ஒவ்வோர் இடமாக ஏறி இறங்கி ஒரு மணி நேரத்தைக் கழித்தாயிற்று. இனி என்ன செய்வது?

நடப்போம்.... நடந்து கொண்டே இருப்போம்.

பஸ் முனையிலிருந்து கச்சேரி ரோடு வழியாக நடக்கத் தொடங்கினாள் மாலா.

ஒரு ஸ்கூட்டர் பின்புறமாக வந்து அவள் மீது உரசினாற்போல் நின்றது.

விஜய்தான்! மாலாவுக்குக் 'குப்'பென்று வியர்த்துவிட்டது.

"ஏறு பின்னாலே...." என்றான் விஜய். அவன் குரல் கடுமையாய் ஒலித்தது.

'அப்படியானால் இவருக்குச் செய்தி எட்டிவிட்டது. அதுதான் பதறிப் போய் வந்துவிட்டார்!'

மாலாவுக்கு அது ஒரு கள்ளத்தனமான மகிழ்ச்சி — விஜய் தன்னைப் புறக்கணித்துவிடவில்லை என்று. ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

"வேண்டாம். நான் நடந்தே போகிறேன்.... என்னைத் தனிமையில் விடுங்கள்" என்று ஓர் அடி எடுத்து வைத்தாள்.

"மாலா" என்று சீறினான் விஜய்.

"தெருவில் நின்று கொண்டு ஏன் கத்துகிறீர்கள்?"

"அப்படியானால் வண்டியில் உட்கார்."— கோபத்தில் அவனுக்கு முகமும் கண்களும் சிவந்து வீங்கிப் போயிருந்தன.

"என்னை எங்கே அழைக்கிறீர்கள்?"

"எங்கேயும் இல்லை.... வண்டியில் ஏறு."

மாலா ஏறிக் கொண்டாள்.

**ஸ்**கூட்டர், கடற்கரையில் உள்ள ஒரு ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தது.

மழை வருவதற்கான அறிகுறிகள் இருந்தாலும், மாலாவை விஜய் ரூஃப் கார்டனுக்கு அழைத்துச் சென்று முதலில் அவளை உட்காரச் சொல்லி — அவள் உட்கார்ந்ததும் — அவளுக்கு அருகில் உட்காரப் போனபோது—

"இல்லே!.... நீங்கள் அப்படி உட்காருங்கள்..." என்று எதிர்ப்புறத்தைக் காட்டினாள் மாலா. விஜய் ஒரு விநாடி அசந்து போனான்.

"அவ்வளவு தூரத்துக்கு வந்துட்டியா?" என்று பொருமலோடு மாலாவுக்கு எதிரில் அமர்ந்து அவளை வெறித்துப் பார்த்தான்.

மாலா தலை குனிந்து கொண்டாள்.

"இனிமே அந்த நாடகத்தில் நடிக்கப் போறதில்லே. அப்படித்தானே...?" என்று தொடங்கினான் விஜய்.

'ஆம்' என்பதற்கு அடையாளமாக மாலா குனிந்தவாறே தலையாட்டினாள்.

"ஏன்? என்ன காரணம்?"

"எனக்கு நடிக்க விருப்பம் இல்லே."

"ஐ டாமிட்..." என்று கூச்சலிடப் போனான் அவன். அதற்குள் வெயிட்டர் வந்துவிட்டான்.

"ரெண்டு ஐஸ் கிரீம்..." என்று வெயிட்டரை அனுப்பிவிட்டு, "எதுக்காக நடிக்க விருப்பம் இல்லே? அப்படி விருப்பம் இல்லாதவ ஏன் நாடகக் குழு ஆரம்பிக்கும்போது சரின்னு சொன்னே...? விருப்பம் இல்லாதவ ஏன் ரெண்டு நாடகங்களிலே நடிச்சே....?" என்று கேள்விகளை அடுக்கினான்.

"என் விருப்பத்துக்காக நான் எதுவும் செய்யலே.... உங்க விருப்பத்துக்காகத்தான்."

"அப்படின்னா தொடர்ந்து நீ நடிக்கணும்ங்கிறதுதான் என்னுடைய விருப்பம்."

"இனிமேல் உங்க விருப்பப்படி நான் நடந்துக்கணும்னு சொன்னால், என் விருப்பப்படியும் நீங்க நடந்துக்கணும்."

## காட்டிக் கொடுக்கும் கம்ப்யூட்டர்!

நெடுஞ்சாலைகளில் வேகக் கட்டுப்பாட்டினை மீறும் காரோட்டிகளைக் காட்டிக் கொடுத்துவிடும் கம்ப்யூட்டர் இந்த பிரிட்டிஷ் போலீஸ் காரில் பொருத்தப்பட்டிருக்கிறது (இடப்புறம் - கீழே). வேகக் கட்டுப்பாட்டினை மீறும் கார் எந்தத் திசையில் சென்றாலும் சரி - போக்கு வரத்து நெரிசல் எவ்வளவானாலும் சரி - அதன் சராசரி வேகத்தைக் காட்டிக் கொடுத்துவிடும் "வாஸ்கார்" எனப்படும் இக்கருவி.

சட்டம் என்பது ஒரு சிலந்திக் கூடு. சிறிய ஈக்கள் சிக்கிக்கொள்ளும். பெரியவை பாய்ந்து கிழித்தெறியும்!




ஒரு பாத்திரத்தை ஏற்குமுன் ஒரு நடிகர் அது தமக்கு ஏற்றது தானு என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஜெமினி கணேசன் இந்தப் படத்தின் கதாநாயகன் — கல்லூரிப் புரொபஸர். நன்றாய்த்தான் நடிக்கிறார்; காதல் காட்சிகளையும் விட்டு வைக்கவில்லை. ஆனல் ரொம்ப வயதானவர் மாதிரி தெரிகிறதே. அதை யாரும் பார்த்ததாகத் தெரியவில்லை.

கமலஹாஸன், சுமித்ரா நல்ல ஜோடி. இளம் விதவைக்கு வாழ்வளிக்கும் கதை ரொம்ப நாசூக்காகக் காட்டப்படுகிறது. இளம் வயதில் வாழ்வை இழந்த ஒரு பெண் தன் கணவனுடன் வாழ்வது போல நடிக்க வேண்டியிருக்கிறது. அந்தக் கட்டத்தில் சுமித்ராவும் கமலஹாஸனும் மிகவும் சுவாரசியமாகவும் நடிக்கின்றனர். தந்தையாக வரும் தங்கவேலு அந்தக் காட்சிக்கு மேலும் சுவை கூட்டுகிருர்.

சுஜாதாவுக்கு மிகமிக சந்தோஷமாகவும், அதேயாவுக்குச் சோகமாகவும் நடிக்க வாய்ப்பு கிடைத்திருக்கிறது. ஒவ்வொரு கட்டத்திலும் நடிப்பில் பாராட்டுப் பெறுகிருர்.

''கோரா காகஸ்'' ''வெற்றுக் காகிதம்'' என்னும் ஹிந்திப் படத்தின் தமிழ் வடிவம் ''லலிதா''. ஒரு சர்வசாதாரணமான கதைக்காக வட நாட்டுக்கு ஓடியிருக்கிருர்களே என்று வேதனைப் படாமல் இருக்க முடியவில்லை.

ஆறு நீண்ட பாடல்கள் படத்தின் 'டெம்போ'வைக் கணிசமாகக் குறைக்கின்றன.

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்றிருப்பவர் வலம்புரி சோமநாதன். நறுக்குத் தெறித்தாற் போன்ற வசனத்துக்காக அவரை மனமாரப் பாராட்டலாம். என். பாலகிருஷ்ணனின் ஈஸ்ட்மன் கலர் ஒளிப்பதிவு இந்தப் படத்தின் தனிச் சிறப்பு.

''லலிதா'' உருக்கமான பல காட்சிகளைக் கொண்ட பழைய காலக் குடும்பக் கதை. புதுமையும் இல்லை. புரட்சியும் இல்லை.

காந்தன்

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

''அதாவது நாம கல்யாணம் பண்ணிக்கணும்னு அர்த்தம். அப்படித்தானே ?''

'' ஆமாம்.''

'' இடியட்... கல்யாணத்தைப் பண்ணிகிட்டு என்ன வாரிக் கட்டிக்கப்போறே... ?'' என்று குமுறினுன் விஜய்.

''இருக்கிறதைக் காப்பாற்றிக் கொள்ளத்தான் கல்யாணம். புதுசா வாரிக் கட்டிக்க இல்லே....''

விஜய்க்கு வாய் அடைத்துவிட்டாற்போல் இருந்தது.

'' இங்கே பார் மாலா... 'பருவக் காற்று' நாடகம் உன் வாழ்க்கையிலே ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியிருக்கு. ஒரு புரொட்யூசர் உன்னைக் கதாநாயகியாக 'புக்' பண்ணியிருக்கார். அதிலிருந்து ஒரு பெரிய நடிகையா வர்றதுக்கு எல்லா சான்ஸ்களும் இருக்கு. உன்னை வைத்து நானும் என் லட்சியத்திலே வெற்றியடைய முடியும். இந்தச் சமயத்தில் நாம் கல்யாணம் பண்ணிக்கிட்டா 'நட்சத்திர மகிமை'யை இழந்துடுவே.''

''பரவாயில்லே...'' என்றுள் மாலா.

அவளை ஓங்கி அறையலாமா என்று இருந்தது விஜய்க்கு. பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாய் இருந்தான்.

தலை குனிந்திருந்த மாலா இப்போது நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். அவள் கண்களில் கண்ணீர் திரண்டிருந்தது. பிறகு அன்ணாந்து பார்த்தாள்.

வானம் முன்னைக்கு இப்போது அதிகமாக இருண்டு, எந்த விநாடியிலும் மழை பெய்யலாம் என்றிருந்தது.

''விஜய்... 'பருவக் காற்று'ன்னு நாடகம் எழுதினீர்களே... இதோ அண்ணாந்து வானத்தைப் பாருங்க. அந்தப் பருவக் காற்று மேகங்களைத் திரட்டிக் கொண்டு வந்து மழை பெய்ய வைக்கப் போகிறது. அந்த மழையிலே மக்களுடைய வாழ்க்கை செழிக்கப் போகிறது. நான் சொல்ற கல்யாணம் ஒரு பெண்ணுக்கு இந்தப் பருவக் காற்று மாதிரி. ஆனுல் நீங்க சொல்ற ஜோடினாமா...? நாம முந்தி போட்டோமே ஒரு நாடகம் 'தென்றல்'ன்னு, அந்தத் தென்றல் மாதிரி. தென்றல் மழையைத் தராது விஜய். பருவக் காற்றுதான் மழையைத் தரும். அதை நினைத்துத்தான் என் அந்தராத்மா துடிக்கிறது.. இப்போவது என் மனசைப் புரிஞ்சுக்குங்க... ப்ளீஸ்'' என்று மாலா அழத் தொடங்கினுள்.

அவளுடைய கண்ணீரோடு சேர்ந்து பருவக் காற்று மேகமும் தன் நீரைப் பொழியத் தொடங்கியது.

விஜய் எழுந்து வந்து மாலாவின் அருகில் அமர்ந்து கொண்டான்.

மழையை அவன் லட்சியம் செய்யவில்லை. ஏனெனில் அதைவிட முக்கியம் மாலாவின் கண்ணீரைத் துடைப்பது....!

# மார்கோ சோப்

## உங்கள் சருமத்தை சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு மட்டு மல்ல. இது அதிக வலுவையும் திடத்தையும் உடலுக்கு அளிக்கிறது.

இது இந்நாட்டின் ஒரு முக்கிய இரசாயன சாலையின் ஆராய்ச்சி மூலம் அறியப்பட்ட ஒரு மகத்தான உண்மை இயற்கையின் அன்பளிப்பான 'நீம் எண்ணெ' கொண்டு தயாரிக்கப்படும் ஒரே சோப் மார்கோ தான்.
மார்கோவில் மட்டுமே இந்த நீம் எண்ணெயின் குணமும் மணமும் அமைந்துள்ளது. உங்கள் உடலை சுத்தமாக வைப்பதோடு மட்டுமல்லாமல் திடமாகவும் இருக்க மார்கோ உதவுகிறது. ஆகையால்தான் மார்கோ சோப் 1920-ம் வருடம் முதல் நிலையான புகழுடன் விளங்குகிறது.




மார்கோ சோப்
எக்காலத்திற்கும் எல்லா
வயதினருக்கும்
ஏற்றது.

IDL/MGN/1Ta

கல்கத்தா கெமிக்கலின் ஒரு தயாரிப்பு








சிறப்புச் சிறுகதை

மூன்று நாட்களாகப் பெய்து கொண்டிருந்த மழை அன்றுதான் நின்றிருந்தது. மஞ்சள் நிறக் காலைப் பொழுதைக் கண்டதும் ரகுவுக்கு ஒரே மகிழ்ச்சி. கட்டிலிலிருந்து கீழே குதித்தான். 'பால்கனி'க்கு விரைந்து சென்று ஆகாயத்தைப் பார்த்தான். மேகத் துணுக்குகள் ஒன்றுகூடக் கண்ணுக்குப் புலப்படவில்லை. 'சூரியனே! உனக்குக் கோடி நமஸ்காரம். இன்று முழுதும் உன்வேலையை ஒழுங்காகச் செய். மேகத்தைப் போர்த்திக் கொண்டு ஓய்வு எடுத்துக்கொண்டு விடாதே. நாளைக்குக் கிரிக்கெட் பந்தயம் நடப்பது உன் கையில் இருக்கிறது. மைதானம் காய்ந்தால் தான் 'டெஸ்ட்' நடைபெற முடியும்!

இந்த 'டெஸ்டை'ப் பார்க்க வேண்டுமென்பதற்காக ஒரு மாத காலமாக அவனுக்கு எத்தனை கனவுகள்! இந்த 'டெஸ்ட்'டில் யார் யார் விளையாடுவார்கள் என்று எத்தனை யூகங்கள்! சிநேகிதர்களுடன் பந்தயங்கள்! நாளை அவனுடைய அபிமான நட்சத்திரங்கள் விளையாடுகிறார்கள். இந்தப் பாழும் மழை அதற்குக் குறுக்கே நின்று விடக் கூடாது.

நாளை 'டெஸ்ட் மாட்ச்' பார்ப்பதில் இன்னொரு விசேஷம் இருக்கிறது. ரமா அவனுடன் வர ஒப்புப் கொண்டு விட்டாள். தன்னுடைய வருங்கால மனைவிக்கும் தன்னைப் போல் கிரிக்கெட்டில் ஆர்வம் இருக்கிறது என்பது அவனை இன்பத்தில் ஆழ்த்தியது. அவளைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு, ஆட்டத்தின் நுணுக்கம் ஒவ்வொன்றையும் அவளுக்கு விளக்கமாகச் சொல்லலாம்.

ரகு மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தான். கூடத்தில் அவன் தந்தை செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்தார்.

அவன் அவர் அருகில் சென்று செய்தித்தாளை எட்டிப் பார்த்தான்.

''பல் தேய்ச்சுட்டு வா... அதுக்குள்ளே என்ன அவசரம்?''

''வெதர் ரிப்போர்ட்! என்ன போட்டிருக்கான் இன்னிக்கு, நன்னு வெய்யில் காயுமாமா?''

'' மீட்ரோலாஜிகல் டிபார்ட்மென்டிலேயும் ஜோஸ்யனைக் கேட்டுத்தான் 'ப்ரடிக்ட்' பண்ணுறு... நீயே போய் ஒரு நல்ல ஜோஸ்யனைப் பார்த்துக் கேட்டுடு.''

தந்தையின் ஹாஸ்யத்தை அநுபவிக்கும் மன நிலையில் அவன் இல்லை. அவன் வெதர் ரிபோர்ட்டை ஊன்றிப் படிக்கத் தொடங்கினான்.

''நல்ல வேளை, 'சைக்ளோன்' ஆந்திராவை நோக்கிப் போகிறதாம்; மெட்ராஸிலே மழை பெய்யாது'' என்றான் ரகு.

''எவ்வளவு நல்ல மனசுடா உனக்கு?'' என்று சொல்லிக் கொண்டே வந்த அவன் அம்மா, அவன் தந்தையருகே காப்பித் தம்ளரை வைத்தாள்.

அம்மா சுட்டிக் காட்டிய பிறகுதான், தன்னுடைய கிரிக்கெட் ஆர்வத்தில், எந்த அளவு சுயநலம் கலந்திருக்கிறது என்று அவனால் புரிந்துகொள்ள முடிந்தது. அவனுக்கு வெட்கமாகப் போயிற்று.



வியன்னாவில் நகர மக்கள் சாலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஜனாதிபதியோடு டெலிபோனில் பேசிக் குறைகளைத் தெரியப்படுத்தலாம். அந்த ஒரு மணி நேரம் டெலிபோனை அவரே எடுத்துப் பேசுவார். -இந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

---

''அதுக்கில்லேம்மா. நாளைக்கு கிரிக்கெட் பந்தயம் நடக்குமா....?'' என்று சொல்லி முடிப்பதற்குள் அவள் குறுக்கிட்டாள்:

''ரமாவும் வராளா?''

''வரா....?''

''ஜாக்கிரதையா அழைச்சுண்டு போய் விட்டு வா. மழை பெய்தால் போக வேண்டாம்....''

''மழை பெய்தால் கிரிக்கெட் நடக்காது.''

''ராத்துக் கணக்கிலே ஆட்களை வைத்துக் கொண்டு தண்ணியெல்லாம் அப்புறப்படுத்தறாளாமே... வெரிகுட் அரேஞ்ச்மெண்ட்'' என்றார் அப்பா.

''பேப்பரிலே போட்டிருக்காளு?'' என்று கேட்டாள் அம்மா.

''ஆமாம்.''

ரகுவுக்கு அன்று கல்லூரியில் பாடத்தில் கவனமே செல்லவில்லை. நண்பர்களுடன் நாளை கிரிக்கெட் பந்தயம் ஆரம்பிக்குமா, ஆரம்பிக்காதா என்றுதான் சர்ச்சை.

ரமா அன்று கல்லூரிக்கு வரவில்லை. அவனுக்கு ஏமாற்றமாக இருந்தது.

கல்லூரி விட்டதும், நேரே அவள் வீட்டுக்குச் சென்றான். அவள் வீட்டிலேயும் இல்லை.

''காலேஜுக்கு வரல்லே?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் ரமாவின் அம்மா.

''இல்லியே....''

''பின்னே எங்கே போயிருப்பா? காலேஜுக்குப் போறதாத்தானே சொல்லிட்டுப் போனா?'' இப்பொழுது அவள் குரலில் இலேசாகக் கலவரம் படர்வது போல் அவனுக்குப் பட்டது.

''எங்க வீட்டுக்குப் போயிருப்பாளோ?''

''போன் பண்ணிப் பாரு....''

அவன் தன் வீட்டுக்குப் போன் செய்தான். அங்குமில்லை. பிறகு எங்குதான் போயிருப்பாள்? சிநேகிதிகளுடன் சினிமாவுக்குப் போயிருப்பாளோ? சொல்லாமல் கொள்ளாமல் அப்படிப் போக மாட்டாள். அவனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. மழைத் தொந்தரவு போதாது என்று, இது வேறு? நாளைக்கு 'மாட்ச்'சுக்குப் போக முடியாமல் ஆகி விடுமோ? தெய்வமே! ரமாவுக்கு ஒன்றும் நேர்ந்து விடக் கூடாது. நாளைக்கு எப்படியும் பந்தயம் பார்த்தாக வேண்டும்.

அலுவலகத்திலிருந்து ரமாவின் தந்தை வந்ததும், அவருடைய மனைவி அவரிடம் சொன்னாள்: ''இன்னிக்கு ரமா காலேஜுக்குப் போகவில்லையாம். வீட்டுக்கும் இன்னும் வரக் காணும். ரகு தேடிண்டு வந்திருக்கிறான். எங்கே போயிருப்பா?''

ரமாவின் அப்பா இலேசில் உணர்ச்சி வயப்படக்கூடியவரல்லர். அவர் நிதானமாகச் சோபாவில் உட்கார்ந்து, ''நீ எப்போ வந்தே ரகு?'' என்று கேட்டார்.

''அவன் வந்து அரை மணியா காத்திண்டிருக்கான்.''

''என்ன விசேஷம்? நாளைக்குத்தானே கிரிக்கெட் பந்தயம்?''

ரகுவுக்குக் கோபம் கோபமாக வந்தது. என்ன மனுஷன், பெண்ணைக் காணவில்லை என்றதும், அதைப் பற்றிக் கொஞ்சம் கூடக் கவலைப்படாமல்...?

''ரமா எங்கே போயிருப்பாள்?'' என்றாள் ரமாவின் அம்மா.

''சரி, காப்பி கொண்டா. நீ காப்பி குடிச்சிட்டியா, ரகு?'' என்றார் ரமாவின் அப்பா

''அவன் குடிச்சாச்சு. ரமா எங்கே போய் இருப்பாள் என்கிறேன், என்ன இது, அதைப் பத்திக் கொஞ்சங்கூட கவலைப்படாமல்?''

''மத்தியானம் ரமா ஃபோன் பண்ணா... கோட்டூர்புரம் போறேன்னா... மழையினாலே அவஸ்தைப்படற ஜனங்களுக்கு, உணவுப் பொட்டலம் விநியோகம் பண்றாங்களாம். அவ சம்பந்தப்பட்ட அசோஸியேஷன் இதைச் செய்யறது போலிருக்கு. போயிருக்கா... வந்துடுவா.''

''அப்பாகிட்டே பர்மிஷன் வாங்கிண்டு போயிருக்காளா? என்கிட்டக் கேட்கக் கூடாதா?'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே சென்றாள் ரமாவின் அம்மா.

''நாளைக்கும் டிஸ்ட்ரிபியூஷன் உண்டாமா?'' என்று தன் எரிச்சலை அடக்கிக் கொண்டு கேட்டான் ரகு.

''தெரியாது. அவ வந்ததும் கேளு.''

''நாளைக்கு அப்போ அவ கிரிக்கெட் மாட்ச் பார்க்க வர மாட்டாளா?''

ரமாவின் அப்பா புன்னகை செய்தார். மூக்கில் சற்றுக் கீழே இறங்கிய கண்ணாடியைச் சரி செய்து கொண்டார்.

ரமாவின் அம்மா காப்பியைக் கொண்டு வந்து, அவர் எதிரே இருந்த சிறிய மேஜையின்மீது வைத்தாள்.

''ரமா நாளைக்கு என்னோட 'மாட்ச்' பார்க்க வரமாட்டா போலிருக்கு... அவளுக்கு என்னை விட இந்தக் காரியம்தான் முக்கியமாப் பட்டிருக்கு...'' என்றான் ரகு, ரமாவின் அம்மாவிடம்.

''எந்தக் காரியம்?''

''ஃபுட் டிஸ்டிரிபியூஷன்.''

''சேச்சே... இன்னிக்குப் போயிருக்கா... நாளைக்கு உன்னோட நிச்சயமா 'மாட்ச்' பார்க்க வருவா'' என்றாள் ரமாவின் அம்மா நம்பிக்கையுடன்.

ரமாவின் அப்பா ஒன்றும் பேசாமல் மௌனமாகக் காப்பியைப் பருகிக் கொண்டிருந்தார்.

''ரமா செய்யறது சரிங்கிறேளா?'' என்று கேட்டான் ரகு அவரிடம்.

''நான் ஒண்ணும் சொல்லலே. அதோ அவ வரா. அவகிட்டேயே கேளு'' என்றார் ரமாவின் அப்பா.

''ஹலோ ரகு...'' என்று சொல்லிக் கொண்டே சோபாவில் உட்கார்ந்தாள் ரமா.

''எங்கேடி போயிருந்தே? ரகு உனக்காக வந்து காத்திண்டிருக்கான். நீ காலேஜுக்கும் போகலியாமே?''

''ஐ ஆம் ஸாரி ரகு... கோட்டூர்புரம் போயிருந்தேன்.... மை காட்!... குடிசை இருந்த இடத்தி லெல்லாம் ஒரே வெள்ளக் காடு....''

''ஃபுட் டிஸ்ட்ரிபியூஷன் எல்லாம் ஆச்சா?'' என்று, இயற்கையாக ஏற்பட்ட கோபத்தைக் கிண்டலாகக் குரலில் கலந்து கேட்டான் ரகு.

''ஓ எஸ் ... தாற்காலிகமாகச் சோறு போடறதினுலே இந்தப் பிரச்னை — ஐ மீன் பாவர்ட்டி — தீர்ந்துடாதுன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும்...''

''நாளைக்குக் கிரிக்கெட் மாட்ச். வரப் போறயா இல்லியா?''

ரமா அவனை ஏறிட்டு நோக்கினுள். சற்று நேரம் அவனையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்த அவள் முகத்தில் புன்னகையின் கீற்று படிந்தது.

''ஏண்டி, அவனுடை நாளைக்குப் பந்தயம் பார்க்கப் போகப் போறதில்லையா?'' என்று கேட்டாள் ரமாவின் அம்மா.

''இதுக்கு என்னப்பா பதில் சொல்றது?'' என்று சிரித்துக் கொண்டே அப்பாவை வினவினுள் ரமா.

''உன் மனசிலே பட்டதைச் சொல்லு'' என்ருர் அவர்.

''நன்ருயிருக்கு அப்பாவும் பொண்ணும் பேசிக்கிறது... நீ வரேன்னு சொன்னதினுலே தானே பாவம், அவன் டிக்கெட் எல்லாம் வாங்கி வச்சிண்டிருக்கான்? இப்போ என்ன உன் மனசிலே படப் போறது?''

''ஒரு மாசத்துக்கு முன்னுலே இப்படிப் புயல் வரப் போறதுன்னு யார் நினைச்சா?... இப்போ இப்படி ஜனங்கள் வீடு வாசல் இல்லாமல் தவிச்சிண்டிருக்கச்சே...'' என்று ரமா சொல்வதற்குள் அவள் அம்மா இடை மறித்தாள். ''நீ போய் ஃபுட் பாக்கெட் டிஸ்ட்ரிபியூட் பண்ணுத்தான் அவாளோட பட்டினி அடங்கப் போறதோ?''

''அப்படி ஒவ்வொருத்தரும் நினைச் சிண்டா?''

ரகு எழுந்திருந்தான்... ''சரி... நான் போயிட்டு வரேன் மாமி.''





ஆண்டாளின் வாரணமாயிரம் பாசுரத்தை ஸ்ரீமதி என். வி. சௌந்தரவல்லி தமது இனிய குரலில் இசைத்தட்டில் வடித்திருக்கிறார். சென்ற மாதம் சென்னையில் நடைபெற்ற அகில இந்திய ஐக்கிய வைஷ்ணவ மகாநாட்டில் ஸ்ரீ த்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ராமானுஜ ஜீயர் சுவாமிகள் இந்த இசைத்தட்டை வெளியிட்டு, ஸ்ரீமதி சௌந்தரவல்லி ஆழ்வார் பாசுரங்களில் கொண்டுள்ள ஈடுபாட்டைப் பாராட்டி, ''கான திலகம்'' என்ற பட்டத்தை அவருக்கு வழங்கி ஆசீர்வதித்தார்.

---

''அவ இப்போ இப்படித்தான் பேசுவா... நாளைக்கு உன்னோட வருவா, கோவிச்சுண்டு போகாதே'' என்றாள் ரமாவின் அம்மா.

''ஐ ஆம் ஸாரி ரகு... நாளைக்கும் நான் கோட்டூர்புரம் போயாகணும்.''

''அதுதான் உனக்கு முக்கியமாப் படறது இல்லையா?''

''எஸ்... இட் ஹாஸ் எ லிஸ்ட் ஆஃப் ப்ரையாரிட்டீஸ். நீ உன் ஃப்ரெண்ட்ஸ் யாரை யாவது அழைச்சுண்டு போ.''

''என் ப்ரெண்ட் யாரையாவது அழைச்சுண்டு போறேன், இல்லாட்டா உனக்காக வாங்கின டிக்கெட்டைக் கிழிச்செறியறேன். உனக்கு என்ன அதைப் பத்திக் கவலை?''

ரகு மிகுந்த கோபத்துடன் அந்த வீட்டை விட்டு வெளியேறினான்.

அவன் தன் வீட்டுக்குள் நுழைந்ததும், அவனுடைய அம்மா ஏதோ புத்தகம் படித்துக்கொண்டிருந்தவள், அக்கறையுடன் விசாரித்தாள்: ''ஏண்டா, ரமா வந்துட்டாளா?''

அவன் பதில் கூறாமல் மாடிக்குச் சென்றான். கையில் இருந்த புத்தகத்தை மேஜையின் மீது வீசிவிட்டு, கட்டிலில் சாய்ந்தான்.

பார்க்கப் போனால் ரமாவின் செய்கை அவனுக்கு அவ்வளவு ஆச்சரியத்தைத் தரவில்லை. அவள் எப்பொழுதுமே இப்படித்தான். பிடிவாதக்காரி. வயதுக்கு மீறிய புஸ்தகங்களைப் படித்து விட்டு ஏதேதோ உளறிக் கொண்டிருப்பவள். இந்த விஷயத்தில் அவள் அவளுடைய அப்பாவைக் கொண்டிருந்தாள். அவளுக்குக் கிரிக்கெட்டில் ஈடுபாடு இல்லாமல் இல்லை. அவளைப் பந்தயம் பார்க்க அவன் கூப்பிட்டதும் அவள் ஒப்புக் கொண்டு விட்டாள். ஆனால் இப்பொழுது 'ப்ரையாரிட்டீஸ்' அது இது என்று கூறுகிறாள். வாழ்க்கையில் எது முக்கியம் என்று அவனைவிட அவளுக்குத்தான் தெரியுமென்று காட்டிக் கொள்ள வேண்டுமாம்!

''ரகு... என்னடா ஆச்சு?'' என்று அம்மா மாடிப் படியருகே நின்று கொண்டு உரக்கக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

அவளால் படியேறி மாடிக்கு வர முடியாது. 'ப்ளட் ப்ரெஷர்'. பதில் கூறாமல் இருந்தால் அவளுடைய இரத்த அழுத்தம் அதிகமாகி விடும் என்று அவனுக்குப் பட்டது. அவன் கீழே இறங்கி வந்தான்.

''என்னடா ஆச்சு? பதில் சொல்லாம இருக்கே?''

''ஒண்ணும் ஆகலே. அவ வீட்டுக்கு வந்தாச்சு. 'சோஷல் செர்வீஸ்' பண்ணப் போயிருந்தாளாம்.''

''சோஷல் சர்வீஸா? எங்கே போயிருந்தாளாம்?''

''கோட்டூர்புரம் சேரிவாழ் மகாஜனங்களுக்கு இலவச உணவு விநியோகம் செய்ய... நாளைக்கு 'மாட்ச்'க்கு வரமாட்டாளாம். நான் அவளுக்காக வாங்கின டிக்கெட்டைக் கிழிச்செறியப் போறேன்.''

''உனக்குப் பைத்தியம் பிடிச்சுடுத்தா? அவ வரலேன்னு வேறே யாரையாவது அழைச்சிண்டு போ. கிழிச்சு எறிவானேன்?''

''எனக்கும் அவளுக்கும் சம்பந்தம் இனிமேல் அவ்வளவுதான்... டிக்கெட்டைக் கிழிச்சு எறியற மாதிரி...''

''சரி... சமர்த்துத்தான் போ. அவ மாட்சுக்கு வரமாட்டேன்னுட்டாளாம், அதுக்காக இனிமேல் அவளோட சம்பந்தம் கிடையாதாம்.... உனக்கு வெட்கமா இல்லே இப்படிச் சொல்ல? 'நீ கிரிக்கெட் மாட்ச் போகக் கூடாது, கோட்டூர்புரம் வா'ன்னு அவ சொன்னாளா? நீ கோட்டூர்புரம் வரலேங்கிறதுக்காக உன்மாதிரி அசட்டுத்தனமாக அவ சொல்லப் போறாளா? ஏண்டா, ஆம்பிளைக்குத்தான் உரிமை இருக்கா, பொம்பளைட்டியை அதிகாரம் பண்ண? எந்த 'செஞ்சுரி' லேடா இருக்கே நீ?''

ரகு அம்மாவை உற்றுப் பார்த்தான். அம்மாவும் அவள் பக்கம்.

''கோட்டூர்புரம் எங்கேயோ அத்வானத்திலே இருக்கு. உன் வருங்கால மாட்டுப் பொண்ணு அங்கே தனியாப் போறது சரிங்கிறியா?''

''தனியாப் போயிருக்க மாட்டாளே.... அவகூட எத்தனை நல்லவா போயிருப்பா?''

''அப்படி அங்கே போறவாள்தான் நல்லவாளா?''

''நிச்சயமா... உங்கப்பா இன்னிக் காலம்பற சொல்லிண்டிருந்தாரே... நாத்துக் கணக்கிலே ஆட்களை வைச்சுக் கிரிக்கெட் மைதானத்திலேயிருந்து தண்ணியை அப்புறப் படுத்தறான்னு, அப்போ எனக்கு என்ன தோணிச்சு, தெரியுமா?''

''என்ன?''

''இப்போ ஏற்பட்ட வெள்ளத்திலேயே ஆயிரக் கணக்கான பேருக்கு வீடு, வாசல்லாம் போயிருக்குமே, அங்கே போய் அவாளுக்கு உபகாரம் பண்ணுமே, காசு இருக்கிற முப்பதினாயிரம் பேர்கள் கிரிக்கெட் பாக்கணுங்கிறதுக்காக எதற்காக இப்படிப் பிராணனை விடணும்னு... ரமா சொல்றது சரிதான். எனக்குத் தப்பாப் படலே. அவளுக்காவது சவு இரக்கம் இருக்கே!''

''நாட்டிலே நிறையப் பிச்சைக்காரா இருக்காங்கிறதுக்காக நான் சாப்பிடாமெ இருக்க முடியுமா?''

''அதுக்காக அவா எதிரே போய் விருந்து சாப்பிட வேணுமே. ஒரு பக்கம் ஜனங்க எங்கே தங்கறது, என்ன சாப்பிடறதுன்னு

கஷ்டப்படறச்சே, நூறும் இருநூறும் கொடுத்துப் பணமுள்ளவா கிரிக்கெட் பார்க்கிறது நன்னாவா இருக்கு?''

அம்மாவால் இப்படியெல்லாம் பேச முடியுமென்று அவன் எதிர்பார்க்கவில்லை. அவனுடைய அப்பாவும் அவனைப் போலத்தான். கிளப்புக்குச் சீட்டாடப் போனாரானால் இரவு ஒரு மணிக்குத்தான் திரும்புவார். வீட்டில் நண்பர்களுக்கு அடிக்கடி விருந்து வேறு. அப்பாவினிடம் ஏற்பட்ட அந்த எதிர்ப்பு உணர்ச்சிதான் அம்மாவை இப்படிப் பேச வைத்திருக்கிறது. அப்பாவிடம் வழக்காடுவது என்பது அம்மாவுக்கு முடியாத காரியம். தன்னை அவள் விருப்பப்படி வளர்க்கும் உரிமையை அப்பா அவளுக்கு வழங்கவில்லை என்ற ஏக்கம் அம்மாவுக்கு இருக்கலாமோ? — அப்பாவின் அப்பா பெரிய வக்கீல். அம்மாவின் அப்பா அவரிடம் குமாஸ்தாவாக இருந்தவர். அம்மாவின் அழகுக்காக அப்பா ஒரேயடியாகப் பிடிவாதம் பிடித்து அம்மாவை மணந்து கொண்டாராம். 'பணக்காரா' 'காகன்னவா' என்று அம்மா அடிக்கடி சுட்டிக் காட்டுவதற்கு அம்மாவின் குடும்பப் பின்னணியும் ஒரு காரணமாக இருக்குமோ?...

'எனக்குக் கிரிக்கெட் என்றால் பைத்தியம் என்பது வாஸ்தவம்தான். ஆனால் அம்மா சொல்வது போல், இந்தச் சூழ்நிலையில் கிரிக்கெட் பந்தயம் பார்ப்பது ஆபாசம் தானோ? — அன்று ரமா ஏதோ புத்தகத்தைப் படித்துவிட்டுச் சொன்னாள் — ஒரு பெண் திர்வாணமாக வந்து நின்றால் அது ஆபாசமல்ல, மானத்தைக் காக்க ஒரு சரியான உடைகூட இல்லாமல் தவிக்கும் பெண்ணுக்கு எதிரே பட்டுப் புடவையைக் கட்டிக்கொண்டு போவதுதான் ஆபாசம். அப்படியானால், நாளைக்கு நான் பந்தயத்துக்குப் போகாமல் இருந்து விடட்டுமா?...'

இந்த எண்ணம் வந்ததும் அவன் மனத்தில் ஒரு சூன்யம் ஏற்பட்டது. இது முடியாத காரியம். நாளைக்கு அவனுடைய அபிமான நட்சத்திரங்கள் ஆடுகிறார்கள். இந்த 'மாட்ச்'க்காக அவன் ஒரு மாத காலமாகக் காத்திருக்கிறான். அவன் போகாமல் 'மாட்ச்' மட்டும் மிகவும் சுவாரசியமாக இருந்து விட்டால் இதனால் ஏற்படக் கூடிய ஏக்கத்தை அவனால் சமாளிக்க முடியாது. அவன் போனால் என்ன?

''நீ போறதா இருந்தால் போ. பொறத்தியாரைக் கட்டாயப்படுத்தாதே. அதுக்காகச் சொன்னேன்'' என்றாள் அம்மா.

''நான் போகத்தான் போறேன்.''

''சரி. அப்படின்னா சாப்பிட்டுட்டுப் போய்த் தூங்கு. காலம்பற சீக்கிரம் எழுந்திருக்க வேணுமா?''

அவன் சாப்பிட்டுவிட்டு மாடிக்குச் சென்றான். வெகு நேரம் வரை அவனுக்குத் தூக்கம் வரவில்லை. அம்மா சொல்வது சரியா என்பது பற்றிய மனக் குழப்பங்கள். அப்படிப் போகாமல் இருந்து விட்டால், அவன் இழப்பது என்ன? ஏழைகள் வெள்ளத்தினால் அவதிப்படுகிறார்கள் என்பதற்காக விசுவநாதின் 'ஸ்கொயர்-கட்டை' ரசிக்காமல் இருக்க முடியுமா? அவன் மனத்தில் மான



பீகாரில் ஓர் ஊரிலிருந்து இன்னொரு ஊருக்கு ரயிலில் ஓர் ஆடு அனுப்பப்பட்டது. அந்த ஊருக்கு ரயில் போகுமுன் ஆடு இரண்டு குட்டி போட்டது. ரசீதில் ஒரு ஆடு என்று எழுதியிருப்பதால் ஸ்டேஷன் மாஸ்டர் குட்டிகளைத் தர மறுத்தார். பிறகு மூன்று உருப்படிகளுக்கு சார்ஜ் கேட்டார். கடைசியாக உள்ளூர் மக்கள் தலையிட்டு வழக்கை முடித்தனர்!

சண்டே - பாபு

சீகமாக ஒரு டெஸ்ட் பந்தயம் நடக்கத் தொடங்கியது. அந்த இன்ப மயக்கத்தில் அவன் அப்படியே உறங்கி விட்டான்.

திடீரென்று அவனுக்கு விழிப்பு வந்தது. நன்றாகப் புலர்ந்திருந்தது.

மழை இல்லை...இன்று பந்தயம் உண்டு. அவன் எழுந்து பால்கனிக்குச் சென்றான்.

இதென்ன? தெருவெல்லாம் ஒரே தண்ணீராக இருக்கிறதே! இராத்திரி மழை பெய்ததோ?...

அவன் வெகு வேகமாகக் கீழே இறங்கி வந்தான். அம்மா காப்பி போட்டுக் கொண்டிருந்தாள்.

''ஏம்மா நேத்து ராத்திரி மழை பெஞ்சதா?''

''ஆமாம். நல்ல மழை. கவலைப்படாதே. இன்னிக்கும் நூத்துக் கணக்கான பேர்கள் தண்ணியை அப்புறப்படுத்திண்டிருப்பா!''

''அவ்வளவு பெரிய மழையா?''

''ஆமாம். வாசல்லே போய்ப் பாரேன்... தெய்வத்துக்கே பொறுக்கலே, நீங்க கிரிக்கெட் மாட்ச் பாக்கறது.''

''நாங்க மாட்ச் பார்க்கக்கூடாதுங்கிறதுக்காக அந்தத் தெய்வம் ஏழைகளையும் தண்டிக்கணுமா? மழை பெஞ்சா அவாளுக்கும் கஷ்டம் இல்லையா?''

''மழை பெஞ்சாலும் பெய்யா விட்டாலும் ஏழைகளுக்குக் கஷ்டம் கஷ்டம்தான். நீங்கள்ளாம் கஷ்டப்படறது ஒரு மாறுதல் இல்லையா?'' என்று சொல்லிக் கொண்டே 'காஸ்' அடுப்பிலிருந்து பாலை இறக்கினாள் அம்மா.

அப்பா பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். ரகுவைப் பார்த்ததும் அவர் சொன்னார்: ''இன்னிக்கு 'மாட்ச்' லேட்டாத்தான் ஆரம்பிக்கும்னு போட்டிருக்கான்.''

ரகு ஒன்றும் பேசாமல் சோபாவில் உட்கார்ந்தான்.

'' 'மாட்ச்'க்குப் போறவாள்ளாம் என்ன பண்ணுவா? எப்போ ஆரம்பிக்கப் போறான்னு காத்திண்டு உட்கார்ந்திருப்பாளோ?'' என்று கேட்டுக் கொண்டே கையில் காப்பித் தம்ளரை எடுத்து வந்தாள் அம்மா.

''ஆமாம்... 'மாட்ச்' பார்க்க ஆசை இருந்தா அப்படித்தான் தவம் கிடக்கிற மாதிரி உட்கார்ந்திருக்கணும்'' என்றார் அப்பா.

ரமா தனியாகக் கோட்டூர்புரம் போக வேண்டியதில்லை என்று அவளுக்குச் சொல்வதற்காக போன் அருகே சென்றான் ரகு.

**மூல நோயை**

**முற்றவிடாமல்**

**நம்பிக்கையான**

# ஹெடன்ஸா

**களிம்பு**

**உபயோகித்து**

**நிவாரணம்**

**அடையுங்கள்;**

**—ரண**

**சிகிச்சையையும்**

**தடுங்கள்**

**1898**

முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்

பலத்திற்கும்

**ஆயுர்வேதாஸ்ரமம்**

பிரைவேட் லிமிடெட் • சென்னை-17.

## மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன்

**லிமிடெட்**

பதிவு அலுவலகம்: **13-H, கச்சேரி ரோடு, மாயவரம்-609001**

31-3-1976 முடிய

| | | |
|---|---|---|
| 1. | அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 5 லட்சம் |
| 2. | செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வுகள் | ரூ. 5.5 லட்சம் |
| 3. | நடைபெறும் சீட்டுகளின் மதிப்பு | ரூ. 8 கோடிக்கு மேல் |

**கிளை அலுவலகங்கள்**

மாயவரம், காரைக்கால், பாண்டிச்சேரி
திருப்பாப்புலியூர், கும்பகோணம், தஞ்சாவூர்
சிதம்பரம், சென்னை, காஞ்சீபுரம்

**"உயர்துகை ஏலச் சீட்டு நடத்துபவர்கள்."**

மாயவரம்
27-5-76

**R. கல்யாணசுந்தரம்**
மானேஜிங் டைரெக்டர்

## வட்டமேஜை!

# தாலாட்ட வேண்டாம்; தட்டி எழுப்புங்கள்!



☐ மாக்ஸ்முல்லர் பவனில் Face to face நிகழ்ச்சியில் கி. ராஜேந்திரன் அவர்களை, ''மக்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தட்டி எழுப்புகிற மாதிரி எழுத்துக்களையா இன்றைய எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள்.'' என்று கேட்டேன்.

அதற்கு அவர், ''மக்களைத் தட்டி எழுப்பத் தெரியாவிட்டால் போகிறது. உறங்கச் செய்கிற மாதிரி தாலாட்டுப் பாடும் எழுத்துக்களையாவது எழுதாமல் இருந்தால் சரி!'' என்றார்.

மக்களின் தேவைகளை இன்னதென்று தெரியாத எழுத்தாளர்கள் மக்களுக்கு எதைக் கொடுக்க முடியும்?

இன்று பல எழுத்தாளர்கள் சமுதாயத்திற்காகத் தாங்கள் இருப்பதை மறந்து தங்களுக்காகத்தான் இந்தச் சமுதாயம் இருக்கிறது என்று நினைக்கிறார்கள்.

ஓர் ஆரோக்கியமான சமுதாயத்தை உருவாக்குவது எழுத்தாளர்களின் கடமை இல்லையா? இன்றைய எழுத்தாளர்களின் எழுத்துக்கள் இந்தச் சமுதாயத்திற்குச் சக்தி ஊட்டுபவையாய் இல்லையே!

இவர்கள் பொறுப்புணர்ச்சியை மறந்து போய் ரொம்பக் காலமாகி விட்டது. தாங்கள் எழுதுவது மக்களின் 'பொழுது போக்குக்காக' என்று கூசாமல் பேசும்போதும் எழுதும்போதும் நெஞ்சம் பதைக்கிறது.

20-12-76
சென்னை-5 — சர்வசித்து

☐ நன்றி! நன்றி!! அட்டையில் பேராசிரியர் திரு சுவாமிநாதன் அவர்கள் இருவுருவப் படம் வெளியிட்டமைக்கு. தொண்டு என்பது அவர் கூடப் பிறந்தது. அது அவருடன் பழகும் ஒவ்வொரு மனிதரிடமும் ஒட்டிக் கொள்ளும். வயதில், அனுபவத்தில், சமூக நிலையில் தாழ்ந்தவர்களைக்கூட ரொம்பப் பண்பாக உபசரிக்கும் பாங்கை அவரிடம் காணும் தோறும் ஆனந்தக் கண்ணீர் வரும்.

அவருக்குக் கிடைத்த ஒரு பெரும் பாக்கியம் அவர் சகதர்மிணி. 'கோகுலம்' ஹாஸ்டல் நடத்தி ஹரிஜன மாணவர்கள் பலரை வாழ வைத்த தெய்வம் அவர். நீதிபதி எம். எம். இஸ்மாயில் அவர்கள் 'நான் பேராசிரியர் சுவாமிநாதன் அவர்கள் பாசறையிலிருந்து வந்தவன் என்பதில் பெருமிதம் கொள்கிறேன்' என்றார்கள். அவரைப்போல் பெருமைப்படுவோர் ஏராளமானவர் உண்டு.

சென்னை—2
10-12—76 — டி. பி. பழனிநாதன்

☐ அரசாங்கத் தரப்புச் செய்திகள் ''தமிழ் நாட்டில் இந்த ஆண்டு அதிக விளைச்சல்—எனவே விலைவாசிகள் குறையும்'' என்று கூறுகின்றன. ஆனால் ஒரு கிலோ அரிசி ரூபாய் 2—50க்கு மேல் விற்கிறது. 1—60க்கு விற்ற மட்ட அரிசி ரேஷன் கடைகளில் ரூபாய் 2-க்கு விற்கிறது. எண்ணெய் முதல் நவதானியங்களும் எட்டாத தூரத்துக்கு விலை உயர்ந்து விட்டன. ஹோட்டல்களுக்கு விலை நிர்ணயம் செய்யப்பட்டது. ஆனால் இட்டிலி, காப்பியைத் தவிர எல்லாப் பண்டங்களுக்கும் விலையை ஏற்றி விட்டார்கள். அதற்கு வரி வேறே! இந்நிலையில் 'விலைவாசி ஏற்றத்துக்குக் காரணம் வியாபாரிகளே!' என்று அரசாங்கம் கூறுகிறது. வியாபாரிகள் சொல்கிறார்கள், 'கொள்முதல் விலை கூடிவிட்டது' என்று.

சென்னை—32
17—12—76 — சண்முகநாதன்

☐ வானொலியில், இனி வெளிவரவிருக்கும் படங்களிலிருந்து பாடல்களை ஒலிபரப்புவதைச் சென்ற ஆண்டிலிருந்து தடை செய்துள்ள மத்திய அரசு, டெலிவிஷனில் மட்டும் 'ஒலியும் ஒளியும்' நிகழ்ச்சியில் வெளிவராத புதிய படங்களிலிருந்து இரண்டு பாடல்களை ஒலி பரப்ப அனுமதித்திருப்பது ஆச்சரியமாயுள்ளது. ரேடியோ மட்டும் வைத்துள்ளவரிடம் ஏன் இந்தப் பாரபட்சம்?

16-12-76
சென்னை-41 — ந. வே. பாலசுப்ரமணியன்

☐ கண்ணுக்கு மருந்து போட்ட கைகளைப் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் அதே சமயம் புண்ணை உண்டாக்கிய கைகளைக் கண்டித்திருக்க வேண்டாமா? குடும்பக் கட்டுப்பாடு திட்டத்திற்காக ஆசிரியர்களை ஈடுபடுத்தி அவர்களுக்குச் சமூகத்தில் இருந்த கொஞ்ச நஞ்ச கௌரவத்தையும் பறித்தவர்களை ஏன் கண்டிக்கவில்லை, தலையங்கத்தில்?

திருச்சி-14
23-12—76 — மோகனசுந்தரம்

☐ 'இனி எந்த ஆசிரியரையும் குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சைக்கு ஆள் பிடித்து வரவில்லையானால் ஒழுங்கு நடவடிக்கை எடுப்போம் என்பதாக அச்சுறுத்தக் கூடாது' என்று அரசு பிறப்பித்துள்ள உத்தரவைக் காட்டிலும், 'இனி எந்த ஆசிரியரையும் குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சைக்கு ஆள் பிடித்து வரச்சொல்ல வேண்டாம்' என்ற விதமாக அரசின் ஆணை வெளிவருமாயின், அத்தகைய ஆணையே ஆசிரியர் சமுதாயத்திற்கு புத்தாண்டுப் பரிசாக அமையும்.

சேலம்-63607
23-12-76 — புலவர் அரங்க பழனியப்பன்




கோவலன் மதுரையம்பதிக்குள் புகுந்தது நல்ல வெயில் காலத்தில் ஆகும். அந்தக் காலத்திலே இரவிலும் பகலிலும் மதுரை நகர மக்களுடைய வாழ்க்கை எப்படி அமைந்திருந்தது என்பதனைக் கூறுவதோடு நில்லாமல், மழைக் காலத்திலும், பனிக் காலத்திலும் மதுரை நகர மக்களின் வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதையும் இளங்கோ வர்ணிக்கிறார். சிலம்பை ஒரு சரித்திர நாவலாகவும் செய்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தால் பருவ காலங்கள் அனைத்தையும் இளங்கோ வருணித்து விடுகின்றார்.

நகரம் முழுவதையும் பார்த்துவிட்டு, கண்ணகியும், கவுந்தியும் இருந்த புறஞ்சேரிக்குத் திரும்புகிறான் கோவலன். ஆம், தன் குலத்தவரான வணிகர் வாழும் பிரதேசத்திலேதான் தங்கி வாழ்வதற்கான இடத்தைத் தேடப் போவதாகக் கவுந்தியடிகளிடம் கூறிச் சென்றவன், அதைத் தேடிப் பிடிக்காமலே திரும்பி விட்டான்.

புறஞ்சேரியிலே கவுந்தியடிகளைக் கண்டதும், மதுரையின் அழகையும், பாண்டியனின் செங்கோன்மையையும் அவ்வம்மையாரிடம் வருணித்துக் கூறி மகிழ்ந்தான். கவுந்தியும், 'சென்ற காரியம் என்ன ஆயிற்று?' என்று கோவலனைக் கேட்கவில்லை. இது, சிலம்பிலுள்ள ஒரு குறைதான் என்றாலும், கதையை வளர்ப்பதற்கு இந்தக் குறை கவிஞருக்குத் தேவைப்பட்டு விட்டது.

கோவலன் புறஞ்சேரி திரும்பிய நேரத்திலே அவனுடைய நெடுநாளைய நண்பனான மாடலன் என்னும் அந்தணன், அறவோர் பள்ளியை அடைந்து, அங்கு கோவலனைக் காண்கிறான்.

மாடல மறையோன், தலைச்செங்கானம் என்னும் ஊரினைச் சேர்ந்தவன். நான்மறைகளைப் பழுதற ஓதி, ஐம்புலன்களையும் தன் வயப்படுத்தும் ஆற்றல் பெற்ற அப்பழுக்கற்ற அந்தணனாவான். அவன், மாதவ முனிவனான அகத்தியன் வாழும் பொதிகை மலையை வலம் வந்த பின்னர் புனிதமான குமரி முனைக் கடலில் நீராடி, தன் சுற்றத்தாரை அணுக விரும்பி வந்து கொண்டிருந்தான். வழித் துன்பத்துக்கு ஆறுதல் தேடும் பொருட்டு, கவுந்தியடிகளும் இருந்த அறவோர் வாழும் பொழிலை அடைந்தான். கோவலன், மாடலனைக் கண்டதும், அவன் திருவடிகளை வணங்கினான். நாவன்மையுடையவனான மாடலன், கோவலன் பூம்புகாரில் நிகழ்த்திய அறச் செயல்களை அவனுக்கு நினைவூட்டினான். இவர்களிருவரும் இளம் பருவ நண்பர்களாயினும், காப்பியத்தில் அடைக்கலக் கதையில்தான் இவர்கள் முதன் முதலாகச் சந்திக்கக் காண்கிறோம். இதுவே அந்த ஆருயிர்த் தோழர்களின் இறுதிச் சந்திப்பும் ஆகி விடுகிறது.

மாடலன் சென்ற பின்னர், இடைக் குலத்தைச் சேர்ந்த மாதரி என்னும் முதுமகள் வருகிறாள். புறஞ்சிறைப் பிரதேசத்தில் கோயில் கொண்டுள்ள இசக்கியம்மனுக்குப் பால் சோறு படைத்து வழிபட்டு விட்டு, வரும் வழியில் தற்செயலாக மாதரி கவுந்தியடிகளைச் சந்திக்கிறாள். சந்தித்தவள், அம் மூதாட்டியின் திருவடிகளில் விழுந்து வணங்கி ஆசி பெற்றாள்.

மாதரியை அரங்கிற்குக் கொண்டு வரும் அடிகள், அவள் பிறந்த குலத்தையும், அந்தக் குலத்தின் மரபு வழிப்பட்ட தொழிலையும் சிறப்பித்துக் கூறுகின்றார்.

'' ஆகாத்து ஓம்பி, ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடு இல்லை;
தீதிலள்; முதுமகள்; செவ்வியள்; அளியள்;
மாதரி......''

அடிகள் கோவலர் என்று குறிப்பிடுவது இடையர் எனப்படும் குலத்தரையாகும். அன்னார், பசுக்களைப் பேணி வளர்ப்பவர் என்பதை ''ஆகாத்து ஓம்பும் கோவலர்'' என்ற வாசகத்தால் அடிகள் அறிவிக்கின்றார். இடையர்களுடைய வாழ்க்கையானது கொடுமையற்றது என்றும் ஆசிரியர் கூறுகின்றார்.

மாதரியை அறிமுகப்படுத்துமிடத்து, ''தீதிலள்'', ''முதுமகள்'', ''செவ்வியள்'', ''அளியள்'' என்றெல்லாம் சிறப்பித்துக் கூறுகின்றார். இவ்வளவையும் தவ மூதாட்டியான கவுந்தியடிகளைக் கொண்டுதான் கூற வைக்கின்றார். மாடலனும் கோவலனும் போலக் கவுந்தியடிகளும் மாதரியும் இதற்கு முன் தங்களுக்குள் அறிமுகமானவர்கள் என்றே அனுமானிக்க வேண்டியிருக்கிறது.

கவுந்தி மாதரியைப் பார்த்து கூறுகின்றாள்:

'' மாதரி! கேள்; இம்மடந்தை—தன் கணவன்
தாதையைக் கேட்கின், தன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்துஎதிர் கொண்டு,
கருந்தடம் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்;
உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகும் அளவும்
இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்.''

கண்ணகியை அடைக்கலமாகக் கொடுத்ததோடு நில்லாமல் அவள் சிறப்பியல்புகளை வர்ணித்து அவளை உபசரிக்க வேண்டிய விதத்தையும் மாதவிக்கு எடுத்துரைத்தாள் கவுந்தி.

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

(தொடரும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்




நறுமணம் சிந்தும் ஹமாம்...
உங்களுக்கும் உங்கள் குடும்ப
முழுமைக்கும் புதுமைப் பொலிவு
வழங்கிடுமாம்...உள்ளத்தில்
குதூகலம் பொங்கிடச் செய்திடுமாம்.

## ஹமாம்

அதிக நாள் நீடித்துழைக்கும்
டாய்லெட் சோப்

டாம்கோ தயாரிப்பு—
வாங்க நல்லது
விலை குறைந்தது...
வேலையோ சிறந்தது.
தி டாடா ஆயில் மில்ஸ் கம். லிட்.

CMTH-15-R 172TM

REGISTERED No. M. 4392 [illegible] 75 [illegible]
Registered as a Newspaper in Sri Lanka [illegible] 60 [illegible]

# What we are depends on who you are.

**To anybody who makes, uses or services automotive engines, India Pistons is the No 1 piston assembly manufacturer. But, to each person, we're also something else.**

### To the reconditioning trade, we're a training institute



Every month, 20 servicemen from the automobile reconditioning trade come to us for training. They come from all over India and some foreign countries as well.

So far, we've trained some 1500 men, for ours is the oldest such training course. It's also rated—by the mechanics who use it — as the best.



### To our importers, we're a company that delivers

Twenty-three countries import our pistons, piston rings, cylinder liners and gudgeon pins. Each of them selected us over competing suppliers from all over the world.

Because of them, we've become the biggest exporter of piston assemblies in India. Accounting for roughly 80% of the total exports.

### To Malaysia Pistons, we're a partner




Last year, Malaysia Pistons Sdn Bhd went into production. To manufacture piston assemblies for vehicles which Malaysia imports from all over the world.

Set up as a joint venture between India Pistons and Malaysian interests, Malaysia Pistons is equipped with plant, machinery, know-how and training provided by India Pistons.

### To new entrepreneurs, we're a helping hand



From IP's experience in setting up Malaysia Pistons has come the impetus for yet another dimension in technology-sharing. For some new entrepreneurs in the piston-assembly field, this will mean technical assistance in setting up their companies.

To IP, this represents part of its responsibility as industry leader.



### To our dealers, we're the rangemaker



Our range covers pistons, piston rings and cylinder liners from 50 mm to 150 mm diameter, and gudgeon pins from 9 mm to 50 mm diameter

To our dealers, we represent a piston assembly for every need.

And the kind of quality they — and their customers — know they can rely upon.

### To our OE buyers, we're No 1



Getting selected as Original Equipment supplier to an automobile builder involves more than just meeting technical specifications. It also involves keeping to tight schedules and maintaining reasonable prices despite short-term market fluctuations.

Today, India Pistons accounts for 60% of the total OE market. Which is, perhaps, one of the reasons we also account for over 50% of the replacement market. For our OE buyers are our best spokesmen.

PowerPak piston assemblies from
India Pistons Limited Sembiam Madras 600 011

IP-1180